REGD. No. M. 1190.







# ஆனந்த போதினி

# ANANDA BODHINI

Vol. 28. போதுளடக்கம். No. 9.
சித்திரபானு ௵ பங்குனி ௴

உள்ளடக்கம். பக்கம்



சு...
தேமே...
முறையாலே உ...
தொடு த...
துறையாரும் கட...
துளங்கும்...
பிறையாளன் இ...
பேசா...







# "ஞானத்தபோதினி"

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| வருஷம் 1-க்கு தபாற்கூலி உள்பட | இந்தியா, ஸிலோன் ... ... | 1—0—0 |
| | பர்மா ... ... | 1—4—0 |
| | பினங், ஸிங்கப்பூர் தென் ஆப்ரிக்கா, பஸரா, மெசபொடேமியா முதலிய வெளிநாடுகளுக்கு | 2—0—0 |
| நடந்துகொண்டிருக்கிற வருடத்திய தனிச் சஞ்சிகை விலை | | 0—2—0 |
| சென்ற வருடங்களின் தனிச் சஞ்சிகை விலை | | 0—3—0 |

ஒரு வருடத்திற்குக் குறைந்த சந்தா கிடையாது.

(1) சந்தாதாரராய்ச் சேருகிறவர்கள் பூரணமாகப் பெயரை எழுதி அனுப்பவேண்டும்.

(2) சந்தாத் தொகையை முன்னுடிச் செலுத்தியாவது அல்லது வி. பி. யில் பணம் கட்டியாவது பத்திரிகை பெற்றுக்கொள்ள வேண்டும். எப்போது சேர்ந்தாலும் அவ்வருட ஆடிமாத முதல்தான் கணக்கு வைக்கப் பட்டு ஆடிமாத சஞ்சிகை முதல், பத்திரிகை அனுப்பப்படும்.

(3) சஞ்சிகையை வி. பி. யில் வரவழைப்போர் ரிஜிஸ்டர் சார்ஜ் 3-அணுவோடு (18-4-1921 முதல மணியார்டர் கமிஷன் 10-ரூபா வரையில் 2-அணு வாகையால்) அந்தக் கமிஷன் 2-அணு, வி. பி. க்குத் தபால் சார்ஜ் 0-0-6. ஆக 0-5-6-அதாவது 6-அணு சேர்த்து ரூபா 1-6-0 கட்டி வி. பி. யைப் பெறவேண்டும். மணியார்டர் அனுப்பினுல் 1-2-0 மட்டுமே யாகும். ஆதலால் முன்னுடி மணியார்டர் அனுப்பிப் பத்திரிகை பெற்றுக்கொள்வதே நலம், இதைக் கவனிக்கவும்

(4) யாருக்கேனும் சஞ்சிகை சேராவிட்டால் அவர்கள் அம் மாதம் 15-ம் தேதி வரையில் பார்த்து அதற்குமேல் அந்த தமிழ்மாத முடிவிற்குள் அவ்விவரத்தைத் தெரிவித்தால்தான் மறுபடி யனுப்பக்கூடும். பிறகு தெரிவிப்போர் கிரைய மனுப்பிப் பெறவேண்டும்.

(5) இடம் மாறும் சந்தாதாரர்கள் அடுத்த சஞ்சிகை தங்களுக்குப் புது விலாசத்திற்கு வந்து சேரும் வண்ணம் தபாலாபீஸோடு ஏற்பாடு செய்துகொண்டு நமக்குப் புது விலாசத்தை யறிவிக்கவேண்டும். இன்றேல் அடுத்த சஞ்சிகை பெரும்பாலும் பழைய விலாசத்திற்கே போய்விடும். அதற்கு நாம் பொறுப்பாளியல்ல.

(6) சந்தா நம்பரைக் குறிக்காமல் எழுதும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. அத்தகைய கடிதங்களால் சேரிடும் தவறுதல்களுக்கு நாம் பொறுப்பாளி யல்ல. பதில் விரும்புவோர் ரிப்ளை கார்டாவது தபால் பில்லையாவது அனுப்பினுலன்றி விடை யளிக்கப்பட மாட்டாது.

(7) வியாசங்களை எழுதுவோர் சுத்தமாக இலக்கணப் பிழையின்றித் தங்கள் உண்மைப் பெயருடன், மத தூஷணை, பிறர் தூஷணை விரோதம் முதலியவையின்றியும், பொது ஜனங்கள் ... வும் எழுதவேண்டும்.

Life Subscription { இந்தியா, சிலோன்
ஜீவிய சந்தா { பர்மா, முதலிய வெளிநாடு

Telephone No. 3005. Telegrams:—" A
விலாசம்:—கா. முனிசாமி முதலியார், ...
6, [illegible] தெரு, [illegible]

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



தொகுதி 28 } சித்திரபானுஞு பங்குனிமீ கஉ 1943ஞு மார்ச்சுமீ 14உ { பகுதி 9

## கடவுள் வணக்கம்.

வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப்
பெடையினோடும்
ஒண்டரங்க இசைபாடும் அளிஅரசே!
ஒளி மதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி
புரத் துறையும்
பண்டரங் கர்க்குஎன் னிலைமை
பரிந்து ஒருகால் பகராயே. (1)

பாராயே எனையொருகால் தொழுகின்றேன்
பாங்கு அமைந்த
காராரும் செழுநிறத்துப் பவளக்கால்
கபோ தங்காள்!
தேராரு நெடுவீதித் திருத்தோணி
புரத் துறையும்
நீராரும் சடையாருக்கு என்நிலைமை
நிகழ்த் தீரே. (2)

சிறையாரும் மடக்கிளியே! இங்கேவா!
தேனொடு பால்
முறையாலே உணத்தருவேன் மெய்பவளத்
தொடு தாளம்
துறையாரும் கடல்தோணி புரத்தீசன்
துளங்கும் இளம்
பிறையாளன் திருநாமம் எனக்கு ஒருகால்
பேசாயே. (3)




# மகாத்மா மாதவ முனிவர்

நம் நாடு மகாத்மாக்களுக்குப் பேர்போனது. ஞானிகள், தவசிகள், துறவிகள், முனிவர்கள், யோகிகள் நிறைந்தது நம் தேசம். ஆதலால்தான் நம் பாரத தேசம் புண்ணியபூமி யென்றும், ஞானபூமி யென்றும், தியாகபூமி யென்றும் எல்லாம் வருணிக்கப்பட்டு வருகிறது. உலகிலேயே நம் நாட்டைப்போல் தெய்வ மணமும், சமய மணமும் கமழ்ந்த நாடும், ஞானவொளி வீசிய நாடும் கிடையாது. சிறந்த கடவுள் கொள்கையும், தன்னலத் தியாகமும், துறவு உள்ளமும் உடைய மக்கள் கூட்டத்தை இந்தியாவிலன்றி, வேறு எத் தேசத்திலும் காணமுடியாது. உலகத்தில் பெரும்பாலான நாடுகளில் உலகாயதக் கொள்கை தாண்டவமாடி, மக்களை மண், பெண், பொன் ஆகியவைகள் விஷயத்தில் பேராசை கொள்ளும்படி செய்து பலவகையிலும் அலக்கழித்து வருகிறது. நம் நாட்டிலோ உலகாயதக் கொள்கைக்கே செல்வாக்கு கிடையாது. இந்திய மக்களுக்கு மற்ற மக்களைப்போல் லௌகிக வாழ்வில் அத்துணை விருப்பம் கிடையாது. பாரமார்த்திக வாழ்வில்தான் பற்று அதிகம். சமீபத்தில்தான் சில காலமாக, நம் மக்களில் பெரும்பாலார் உலகாயதக் கொள்கையில் ஊறிய மேனாட்டு மக்களுடன் உறவு கொண்டு இருப்பது காரணமாக, லௌகிக வாழ்வில் மிதமிஞ்சி ஈடுபட்டுக் கெட்டலைந்து வருகின்றனர். அப்படியானால், இப்போது நம் நாட்டில் பாரமார்த்திக வாழ்வில் பற்றுதலுடைய மக்களே இல்லையா? பரமனைப் பஜித்து வரும் மெய்ஞ்ஞானிகள் இல்லையா? என்று கேட்கலாம். அறவே இல்லை என்று சொல்லுவதற்கில்லை. பாரமார்த்திக வாழ்வை மேற்கொண்டவர்கள்—லௌகிக வாழ்வில் ஈடுபட்டிருந்தே பாரமார்த்திக ஞானத்தில் நாட்ட முடையவர்கள் நம் நாட்டில் பலர் இன்னும் இருக்கின்றனர். பரம மெய்ஞ்ஞானிகள்—தவசிகள்—முனிவர்கள் இருக்கின்றனர். ஏன்? இன்று எல்லோருக்குந் தெரிந்த

மகாத்மாகாந்தி யொருவர் போதாதா உதாரணங் காட்ட. சாதாரண லௌகீக வாழ்வில் மட்டுமல்ல; பொது வாழ்வில்—முக்கியமாக—அரசியல் வாழ்வில் இருந்துகொண்டே—பாரமார்த்திக வாழ்வை நடத்தி வருபவர் நமக்குத் தெரிந்து அவர் ஒருவரே யன்றோ! பொய் மலிந்த—இம்சை நிறைந்த மனித வாழ்க்கையை — சத்தியத்துடனும் நடத்தலாம்; அஹிம்சையுடனும் நடத்தலாம் என்று நடத்திக் காட்டியவர் — மேலும் நிலைநாட்டி வருபவர் காந்திஜி யன்றோ! அயோக்கியத் தனத்துக்கும் அசத்தியத்துக்குமே இருப்பிடமான அரசியல் வாழ்வில் கூட அல்லவா அஹிம்சையையும் சத்தியத்தையும் நுழைத்து வேலை செய்து வருகிறார் இவர்!

இந்தியாவில் மட்டுமல்ல; வெளிநாடுகளில் கூட மகாத்மாவின் சத்திய வாழ்வை—பரிசுத்த பாரமார்த்திக வாழ்வை ஏகமனதாகப் பாராட்டுகின்றனர். மகாத்மா அனுஷ்டித்து வரும் அரசியல் கொள்கை பிடிக்காதவர்கள் கூட அவரது பரிசுத்த சத்திய வாழ்க்கையைப் பெரிதும் மதித்து வாழ்த்துகின்றனர் என்றால் அதிகம் சொல்வானேன்!

இவ்விதம் மகாத்மா காந்தி பலதிறப்பட்ட மக்களாலும் அபிப்பிராய பேதமின்றிப் பாராட்டப்படுவதற்குக் காரணமென்ன? அம்மகான் மலை கலங்கினும் நிலை கலங்காது அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட சத்தியாக்கிரகத்தை எல்லா வகையிலும் அநுஷ்டித்து வருவதே யாகும். மகாத்மாவின் சத்தியாக்கிரக சக்தி வெளிப்படுவதற்குரிய சம்பவங்கள் பல அவரது வாழ்க்கையில் நிகழ்ந்திருக்கின்றன. இச்சம்பவங்களே அவரை உலகப் பிரசித்தி பெறச் செய்தன என்றால் மிகையாகாது. சமீபத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவம் மகாத்மாவின் மன வலிமையை—ஆத்மசக்தியை—தவநிலைமையை—முன்னை விட நன்கு உலகுக்கு வெளிப்படுத்திக் காட்டியது.

காந்தியடிகளையும், காங்கிரஸ் தலைவர்களையும் இந்திய சர்க்கார் பாதுகாப்புச் சட்டப்படி சென்ற ஆகஸ்டு மாதத்தில் சிறைப் படுத்தியது உலகப் பிரசித்தம். இவ்விதம் சர்க்கார் தக்க காரண மெதுவுமின்றி தங்களைச் சிறைப்படுத்தியது தவறு என்பது மகாத்மா வாதம். ஆகவே, பகிரங்க விசாரணை செய்து தங்கள் மீதுள்ள குற்றங்களை நிரூபிக்க வேண்டுமென்று அவர் வைஸ்ராய்க்கு எழுதி வற்புறுத்தி வந்திருக்கிறார். நாட்டில் நடைபெற்று வரும் கலகங்களுக்கும் குழப்பங்களுக்கு மெல்லாம் காந்திஜீயும் காங்கிரஸ்காரர்களுமே காரணமென்று பொதுவாகக் கூறி மழுப்பி வந்தார்களே யொழிய, கோர்ட்டுக்குக் கொண்டு வந்து அவைகளை நிரூபிக்க முயலவில்லை. இன்று இல்லாவிட்டாலும் நாளை நியாயம்

வழங்கப்படும்; 'நிரபராதிகளான மனிதர்களுக்கு நாம் தீங்கிழைத்தோம் என்று உணர்ந்து கழிவிரக்கங் கொண்டு சர்க்கார் அதற்கான பரிகாரஞ் செய்வார்கள்; தங்கள் தவறைத் திருத்திக் கொள்ளக் கூடும்' என்று எதிர்பார்த்திருந்த மகாத்மா காந்தி ஆறு மாதங்களுக்கு மேலாகியும், அரசாங்கம் தாங்கள் கூறிவரும் குற்றங்களை நிரூபிக்க முயலாது காலங் கடத்தி வருவதைக் கண்டு அவர் மனச் சோர்வு கொண்டார். இந்த யுத்த நெருக்கடியும், அரசியல் நெருக்கடியும் நாளுக்கு நாள் அதிகரித்து வரும் நிலையில், நாட்டுமக்கள் எவ்விதக் கஷ்டங்களை அனுபவிக்கின்றனரோ என்று கவலை கொண்ட அவர் தாம் வெளியிலிருந்தால், இன்றைய நெருக்கடியில் அல்லற்படும் மக்களுக்குத் தம்மாலான சேவையைச் செய்ய முடியும் என்ற உணர்ச்சி ஏற்படலாயிற்று. ஆகவே, அவர் வைஸ்ராய்க்குக் கடித மெழுதி, ஒன்று தங்களை விடுதலை செய்யவேண்டும்; இல்லையானால், எதற்காகச் சிறைப்படுத்தப் பட்டிருக்கிறோமோ அக் குற்றங்களை நிரூபிக்கவேண்டும் என்று கேட்டிருக்கிறார். இவ் விஷயமாக, காந்தியடிகளுக்கும் வைஸராய்க்கு இடையே நடந்த கடிதப் போக்குவரத்துகளால் எதிர்பார்க்கப்பட்ட பலன் ஒன்றும் ஏற்படவில்லை. எனவே, மகாத்மா வேறு வழியின்றி, வைஸ்ராய்க்குத் தகவல் தெரிவித்து விட்டு தாம் இதுவரை இவ்வித நெருக்கடியான சமயங்களில் அநுஷ்டித்து வந்த சத்தியாக்கிரகத்தின் ஒரு பகுதியான உண்ணு விரதத்தை மூன்று வாரங்கள் அதாவது இருபத்தோரு நாள் கடைப்பிடிக்கத் தீர்மானித்தார். இம் முடிவு இந்தியாவை மட்டுமல்ல; உலக முழுவதையுமே கலங்க வைத்தது. திடீரென வெளிவந்த இச் செய்தி எங்கணும் ஒருவித பரபரப்பை யுண்டு பண்ணியது.

மகாத்மா காந்தி இதற்குமுன் ஐந்து முறை உண்ணுவிரதத்தை மேற்கொண்டிருக்கிறாராயினும்-சாகும் வரை உண்ணுவிரதம் என்றுகூட அனுஷ்டித்திருக்கிறாராயினும், இம்முறை அனைவருக்கும் இவ்வுண்ணுவிரத செய்தி பெருங் கவலையைத் தந்ததற்குக் காரணம், வயது முதிர்ந்த இந்நிலையில் அடிகளது தவவுடம்பு இதை எவ்விதந்தாங்கும் என்ற எண்ணமேயாகும்.

மக்களெல்லாம் இவ்விதம் சிந்தித்துப் பெருங் கவலை கொண்டாலும் மகாத்மா சிறிதுந் தயங்காது, தம் முடிவுப்படி பிப்ரவரி 10-ந் தேதியன்று உண்ணுவிரதத்தைத் தொடங்கி விட்டார். இது கண்டு இந்திய மக்கள் பதை பதைத்தனர். ஜீவாபிமானங் கொண்ட மற்ற தேச மக்கள் துடி துடித்தனர். ஆனால், அதிகார வர்க்கத்தினர் மட்டும் அசைந்து கொடுக்கவில்லை. வைஸ்ராய்க்கும் பிரிட்டிஷ் பிரதம மந்திரிக்கும் இந்தி

யப் பிரமுகர்கள் விடுத்த வேண்டுகோள்கள் வியர்த்தமே யாயின. மகாத்மா உண்ணுவிரதத்தால் ஏற்பட்ட நாட்டு நிலைமையை ஆராய்வதற்கென்று டெல்லியில் கூடிய கட்சிப் பற்றற்ற தலைவர்கள் மகாநாடு செய்த தீர்மானங்கூட அவர்கள் சித்தத்தை இளக்கவில்லை. இவ்விஷயத்தில், லார்டு லின் லித்கோ, கர்னல் அமெரி, மிஸ்டர் சர்ச்சில் மூவரும் ஏகோபித்து "ஒன்றுஞ் செய்ய முடியாது" என்று கூறி விட்டனர்.

உணணுவிரதத்தின் பயனுக, மகாத்மாவின் தேக நிலையில் ஏற்பட்டு வந்த மாறுதலும் தளர்ச்சியும் மக்களுக்கு கவலையையும் துயரத்தையும் தந்து வந்தது. இரண்டாவது வாரத்தில் "மகாத்மா மேலும் உபவாச மிருந்தால் உயிருக்கே ஆபத்து ஏற்படும்" என்று அவரைப் பரீக்ஷித்து வந்த டாக்டர்கள் வெளியிட்ட அறிக்கையைக் கண்டு, மக்கள் அனைவரும் கண்ணீர் விட்டனர். இறைவனைப் பிரார்த்திக்கலாயினர்.

கடைசியாக, காந்தியடிகள் மகா நிபுணர்களான டாக்டர்களும் அதிசயப்படும்படி, கண்டத்திலிருந்து தப்பி, உண்ணு விரதத்தை வெற்றிகரமாக முடித்தார். மகாத்மாவின் ஆத்ம சக்தியைக் கண்டு உலகமே ஆச்சரியத்தில் மூழ்கியது.

மகாத்மாவை கவனித்து வந்த பிரபல டாக்டர்களில் ஒருவரான டாக்டர் பிதன் சந்திர ராய், "மகாத்மா எங்களையெல்லாம் முட்டாளாக்கி விட்டார்.........தமது மன வலிமையால் காந்தியடிகள் தம் தேக உறுப்புக்களையும் அடக்கியாளும் திறமை படைத்தவராக இருக்கிறார்.......மகாத்மா தம் உபவாசத்தைப் பிரார்த்தனையுடன் தொடங்கிப் பிரார்த்தனையுடன் முடித்தார். உபவாசத்தில் அவர் ஒரு கணமேனும் விடாமல் இறைவனைத் தியானித்த வண்ணமே இருந்தார். அவர் மணிக்கு மணி மரணத்துடன் போராடி மிக அமைதியுடன் கஷ்டத்தைத் தாங்கிவந்த அவரது உபவாசத்தை நான் ஒரு 'தவ'மாகவே கருதினேன். பிரார்த்தனை முடிந்ததும் அவர் கண்களை மூடித் தியானம் செய்வதைப் பார்த்தால் ஆண்டவன் அவரது இருதயக் குகையருகில் வந்துவிட்டதாகவே கூறவேண்டும்." எனறு வியந்து பேசினுர். வைஸ்ராய் நிர்வாக சபை மெம்பரான ஸர். ஜ்வாலாபிரசாத் ஸ்ரீ வத்ஸவர், "மகாத்மா காந்தி தமது தவத்திலிருந்து வெற்றிகரமாக மீண்டுவிட்டார் என்ற சுப செய்தியில் அரசியல் சச்சரவுகளெல்லாம் மங்கி விடுகின்றன. இம் மாதவ முனிவரை நமக்கு மீண்டும் காத்துக் கொடுத்ததற்காக ஆண்டவனை நாம் இறைஞ்சுவோமாக!" என்று கூறுகிறுர், அதிலென்ன சந்தேகம்? மகாத்மா காந்தி மாதவ முனிவர் என்பதில் இன்னும் இரண்டுபட்ட அபிப்பிராயம் இருக்க முடியுமோ!

# எதை எரிப்பது?

(வீ. செல்லராஜன்)

பழங்காலத் தமிழர்களிடையே வடமொழி விற்பன்னர்களும் இருந்தார்கள். மதவழிபாட்டின் காரணமாக அவர்கள் காசிபோன்ற தூர க்ஷேத்திரங்களுக்கும் சென்றார்கள். ஆகவே, காசியிலும், கங்காநதிப் பிரதேசத்திலும் அவர்கள் திருவாசகம், பெரியபுராணம், ஆழ்வார் பாடல்கள் முதலியவற்றைப் பாடி வடநாட்டினருக் கிடையே பாராயணம் செய்தனர். இத் தமிழ்ப் பாடல்களின் அரிய கருத்துக்களையும் உள்ளத்தின் ஒளி ரூபமான கீதரசத்தையும் வடநாட்டுச் சைதன்யர்கள் அநுபவத்தோடுமட்டுமின்றி, அவற்றைத் தங்கள் பாஷையிலும் தழுவி எழுதிப் பரப்பினர். வடமொழியிலே எழுதப்பட்ட அக் கவிதைகளைப் படித்து அநுபவித்ததின் காரணமாகவே, கவி. ரவீந்திரநாத தாகூருக்கு, உலகப் பிரசித்தி பெற்ற "கீதாஞ்சலி" எழுத முடிந்தது. "கீதாஞ்சலி" யின் அடிப்படை நம் தமிழ் ஆழ்வாராதிகள் நாயன்மார்களின் இதயவொலியே என்றால் அது மிகையாகாது. 'கீதாஞ்சலி'யின் ஒவ்வொரு பாடலுக்கும்—அதன் நேர்மையான—அல்லது அதனிலும் இனிதான—பாட்டுக்களை திவ்யப்பிரபந்தசாரத்திலிருந்தும் திருவாசகத்திலிருந்தும் எடுத்துக் காண்பிக்கலாம். அவ்வாறு ஆரம்பித்தால் மிகவும் நீண்டுவிடும். ஆனால், எதற்காகச் சொல்ல வந்தேனென்றால்—இவ் விஷயத்தை ஒரு வங்காளியிடம் சொல்லிவிட்டு, என் உயிரை மறுபடியும் தமிழ் நாட்டுக்குக் கொண்டுவர முடியாது. அவ்வளவு ஆவேசம் அவனுக்கு வரும்: தன் தாய்பாஷை மேலும், தன் தாய்பாஷைக் கவிகளின் மேலும் அவனுக்கு அவ்வளவு ஆர்வம்! அதனால் உண்மை மறுக்கிறானே என்று குற்றம் சொல்லுவதற்குமில்லை. தன் பாஷையின்மேல் உள்ள அளவுகடந்த பற்றுதலின் காரணந்தான் அது. தாகூர் தன் 'கீதாஞ்சலி'யை ஆங்கிலத்தில்மட்டும் எழுதியிருந்தால் அவன் அதைப்பற்றி அக்கரை கொண்டிருக்க முடியாது. அதை முதன் முதலிலே வங்காளியிலேயே எழுதினார். ஆகவே அது ஒவ்வொரு வங்காளியின் இதயத்தோடு சேர்ந்து கலந்து கொண்டது. இனிப் பிரிக்க முடியுமா என்ன?

கடந்த கொஞ்ச காலத்திற்குள்—விழித்திருக்கும்போதே, வங்காளம் இவ்வளவுதூரம் விருத்தியடைந்ததின் காரணம்—பிற நாட்டு இலக்கியங்களை தங்கள் தாய்ப்பாஷையிலே அள்ளிப் பொதித்துக் கொண்டனர். பக்கிம்சந்திர சட்டர்ஜியின் நடைமுழுதும் மேல்நாட்டு நாவலாசிரியர்களின் நடையை ஒத்து விளங்குகின்றது. ஆனால் அவர் எழுதும் நாவல்களிலே மேல்நாட்டின் குறிப்பு ஒரு இம்மியளவும் காணமுடியாது. இறுதியில் அது வங்காளத்தின் பரம்பரைப் பொக்கிஷமாகவே திகழ்கின்றது. இந்த நுட்பத்தை தற்காலத் தமிழர்களாகிய நாம் ஆர்வத்தோடு அனுஷ்டிக்காவிட்டாலும் பழந்தமிழர்கள் சும்மா இருக்கவில்லை.

சரித்திர சம்பந்தமான அநேக படையெடுப்பின் காரணமாகவும், மனிதனின் நாடோடிச் சுபாவத்தாலும் வடநாட்டினரான ஆரியர்களும், தென்நாட்டினரான திராவிடர்களும் ஒன்று கலக்க நேரிட்டது. அவர்கள் ஒன்று கலக்கும்போது, அவரவர்களின் காவியங்களும் கலக்கத்தான் செய்யும். கலப்பதுதான் எல்லோராலும் விரும்பத்தக்கது. எங்கெங்கு தமிழன் இருக்கின்றானோ அங்கெல்லாம் நம் தமிழ்க் காவியங்களும் ஒலிக்கவேண்டும் என்று விரும்புவது இயற்கை. இவ்வியற்கை எல்லோருக்கும் பொதுவானது. ஷேக்ஸ்பியரைப்பற்றியும் மில்டனைப்பற்றியும் நாம் படிப்பது ஆங்கிலேயரின் அரசாட்சியே என்பது குற்றமன்று. இதே மாதிரிக் கலப்பு முன்னே ஏற்பட்டது. வால்மீகி என்ற ஒரு வடமொழி விற்பன்னன் "இராமாயணம்" என்ற ஒரு இதிகாசத்தையும் வியாசன் மஹா பாரதத்தையும் சிருஷ்டித்தனர். பின் காலத்தில் அக்கதைகள் தென்னாட்டினிடையே பரவலாயிற்று. அப்போது, வடமொழியில் தேர்ச்சிபெற்ற சிற்சிலர், அந்த இதிகாசங்களின் வடமொழிச் சுலோகங்களைப் பாடி, அதன் பாராயணமாக தமிழிலே தமிழர்களுக்கு எடுத்தோதினர். இவ்வித பாராயணம் அதிகரித்து, அதற்குத் தமிழ் நாட்டிலே செல்வாக்குண்டாகிக் கொண்டிருப்பதைக் கம்பன் கண்டான். அதோடு சோழ மன்னனும் இக்குறையை நிவர்த்தித்து, ராமாயணத்தை தமிழிலே எடுத்தெழுத வேண்டும் என்று கம்பனை வேண்டிக் கொண்டான் என்றே சொல்லப்படுகிறது.

கம்பன் "இராமாவதாரம்" அதுவே இப்பொழுது கம்பராமாயணமாகத் திகழுகிறது. கம்பன் சாதாரண "மொழி பெயர்ப்பாளன்" அன்று. கங்கைக் கரையிலே வாழ்ந்து கொண்டிருந்த இராமனையும் சீதை, லக்ஷ்மணன் முதலியவர்களையும், அவன் வால்மீகி இராமாயணத்திலே கண்டான். அவர்களை, அந்தரமாகத் தூக்கிக் காவிரிக் கரைக்கு இட்டு வந்தான். "தமிழர் ஆபரணங்களையும், தமிழர் நடையுடைகளையும் அவர்களுக்குத் தந்தான்" என்று கூறுவதைக் காட்டிலும், அவர்களைத் தீயிலிட்டுப் பொசுக்கிவிட்டு—சுத்தத் தமிழர்களாகவே—தன் காவியத்தில் சிருஷ்டித்தான். ஏன், கம்பன் தமிழ் வீரர்களையும், தமிழ்க் கற்பரசிகளையும், தமிழ்த் தடியர்களையுந் தானே அவன் காண முடியும்? அயோத்திநாட்டை அவன் வருணித்தான் என்று கூறப்படுகிறது. வருணித்தான்—அயோத்தியென்று பெயர்மட்டும் சூட்டிக்கொண்டு; அவ்வளவும் காவிரி நாட்டையே வருணித்தான். அதைப் பகிரங்கமாகவே ஒரு இடத்தில் "காவிரிநாடன்ன அயோத்தி" என்றே கூறிவிடுகின்றான். உபமேயத்தைக் காட்டிலும் உபமானமே எப்போதும் பெரிதாக இருக்க வேண்டியது இயல்பு. "மலைபோன்ற தோள்" என்றால் உண்மையில் தோளைக்காட்டிலும் மலை பெரிதாகவே இருக்கவேண்டும். அதே போல், 'காவிரி நாடன்ன அயோத்தி' என்றால் அயோத்தியைக் காட்டிலும், காவிரிநாடு உயர்வானதாகவே இருத்தல் வேண்டும். விஷ்ணுவே அயோத்தியில் அவதாரம் செய்திருந்தாலும் கம்பன்

தன் தமிழ்நாட்டைக் காட்டிக்கொடுக்க இசையவில்லை. எல்லாம் தமிழ் மயமாகச் செய்தான். அதன் காரணமாக வால்மீகி ராமாயணத்திற்கும் கம்ப ராமாயணத்திற்கும் மிகுந்த வேற்றுமை காணப்படுகிறது. "கபட சந்யாசியின் உருவத்தில் வந்த இராவணன் சீதையைக் கட்டித் தழுவித் தூக்கிச் சென்றான்" என்று வால்மீகி எழுதினான். இது ஆரிய நாட்டிற்குப் பொருந்தும் என்னலாம். "ஒரு இளம் பெண்ணைத் தெருவிற்போகும் ஒருவன் கண்டு இச்சித்தான்" என்றால் அது அப்பெண்ணின் கற்பிற்கே பாதகம் என்று கற்பை அவ்வளவு உயர்வாகக் கருதும் தமிழ் நாட்டிலே பிறந்து வளர்ந்த கம்பன் இம்மாதிரிக் கட்டங்களைக் கண்டு சும்மா விட்டிருக்க முடியாது. அதை அப்படியே மாற்றிவிட்டான். பர்ணசாலையோடு பெயர்த்தெடுத்து விமானத்திலே வைத்து இராவணன் சீதையைக் கொண்டு சென்றான் என்றே மாற்றிவிட்டான். இதுபோல் எத்தனையோ மாறுதல்கள்! இராமன் விஷ்ணுவின் அவதாரமே என்றுமட்டும் கம்பன் அன்பு செலுத்தி யிருக்கமுடியாது. இராமனைச் சுத்தத் தமிழனாக மாற்றிவிட்டதிலே கம்பனுக்கு அளவுகடந்த ஆனந்தம். தமிழ் இராமன் என்றபோது அவனைக் கம்பன் நேசிக்காதிருக்கவும் முடியாது. இவ்வாறு தமிழ் நாட்டின் வருணனைகளும் தமிழர் நாகரிகம் பழக்க வழக்கங்கள் முதலியவற்றை, இனிய, சுத்தத் தமிழிலே—கடைந்தெடுத்த ஒரு தமிழ்க் கவிஞன்,—தமிழ்நாட்டிலே—தமிழரசன் அவையிலே—தமிழ்ப் புலவர்கள் பலர்கள் முன்னிலையில் அரங்கேற்றப்பெற்று—தமிழர்கள் எல்லோரும் பொக்கிஷமாகக் கருதிப் பாதுகாத்துவரும் "கம்ப ராமாயணத்தை", வடமொழிப் பெயர்ச் சொற்களைமட்டும் கையாண்டிருக்கும் ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு ஒரு சிலர் "இதை எரித்துச் சாம்பலாக்க வேண்டும்" என்று கிளம்பினால்—இதைக் கண்டு நாம் சிரிப்பதா, அழுவதா என்றே புரியவில்லை.

தன் சொந்தக் கற்பனா சக்தியினாலும் கவிதா சக்தியினாலும் கம்பன் வால்மீகியின் இராமாயணம் போன்ற எத்தனையோ வேறு வேறு கதைகளைத் தமிழ்ப் பெயர்களோடு சிருஷ்டிக்க முடியும். அது அவனுக்கு மிகவும் எளிதான காரியமே! ஆனால் அவன் தன் கற்பனைக்கு அடிகோலியாக வால்மீகியின் இராமாயணத்தை ஏன் கையாண்டான்? காரணமில்லாமலில்லை. அவ்வமயம் இராம பக்தியும், வைஷ்ணவர்களின் செல்வாக்கும் அதிகமாகத் தமிழ் நாட்டிலே காணப்பட்டது. 'இராமன்' என்ற பெயரை மட்டும் வைத்துக்கொண்டு கம்பன் தமிழர் நாகரீகத்தைப் பரப்பினான். இது தவிர்த்து வேறு என்ன செய்ய முடியும்? ஆகவே கம்பனின் கவியமுதைப் பருகுவதற்கே—தமிழரின் புண்ணியமாகவே—அதற்கு அடிகோலியாக வால்மீகி இராமாயணம் செய்தான் என்றே கூறவேண்டும். கம்பனைத் தாண்டிவிட்டது வால்மீகி இராமாயணந்தானே! இதைவிட இன்னும் அழகாக ஒருவர் சொல்லுகிறார். "இராமன் உலகத்திலே அதர்மத்தைக் குலைத்துத் தர்மத்தை நிலைநிறுத்துவதற்காக அவதாரம் செய்தான் என்பது

# ஐய வினா

அகத்தியர் தமிழ் நாட்டுக்கு வந்து பொதிகை மலையில் இருந்து கொண்டு தமிழ் மொழியைப் பல வகையிலும் சீர்திருத்தம் செய்தார். அப்பொழுது தென்னாட்டை ஆண்டு வந்தவன் காய்சின வழுதி என்னும் பாண்டியன். இவன் அகத்தியரைக் குருபீடமாக வைத்து தென் மதுரையில் ஒரு தமிழ்ச் சங்கம் அமைத்தான். அதுவே முதற் சங்கம்.

அதைத் தொடர்ந்து தென்னாட்டில் முதல் இடை கடை என்னும் மூன்று சங்கங்கள் ஒன்றன்பின் ஒன்றாக நடைபெற்றிருக்கின்றன. இச்சங்கங்கள் அவ்வக்காலங்களில் அரசு செய்து வந்த பாண்டிய மன்னர்களின் முழு ஆதரவாலேயே நடந்து வந்திருக்கின்றன. தமிழ் மொழியை எல்லா வகைகளிலும் வளர்ப்பதே இச்சங்கங்களின் நோக்கம். இச்சங்க காலங்களில் தென்னாட்டில் வழங்கி வந்த சொற்கள் முழுதுந் தனித்தமிழ்ச் சொற்கள்.

இனி, பாண்டி நாட்டில் சிவபெருமான் நடத்திய திருவிளையாடல்கள் அறுபத்து நான்கு. அவ் விளையாடல்களை எடுத்துக் கூறுவது திருவிளையாடற் புராணம். அப்புராணத்தின்படி பார்த்தால், பாண்டி நாட்டை ஒருவர்பின் ஒருவராக எழுபத்தைந்து அரசர்கள் ஆண்டு வந்ததாகக் காணலாம்.

ஆனால், இந்த எழுபத்தைந்து மன்னர்களுடைய பெயர்களுள் ஒன்றேனும் தமிழ்ப்பெயராகக் காணோம்: முழுதும் வடமொழிப் பெயர்கள்.

அரசர்களைத் தவிர மேற்படி புராணக் கதைகளில் வந்துள்ள தமிழ் நாட்டு மக்களுடைய பெயர் சில காண்கின்றன. அப்பெயர்கள் முப்பத்தெட்டு. அவற்றுள் இருபத்தெட்டு வடமொழிப் பெயர்கள்.

தனித்தமிழே வழங்கி வந்த தமிழ்நாட்டில், மேற்சொன்ன வகையில் வடமொழிப் பெயர்கள் வந்த வரலாறு என்ன? அறிஞர்கள் "ஆனந்த போதினி" வாயிலாக விளக்குவார்களாக.

—சி. மீனாட்சி அம்மாள்.

---

சுத்தப் பொய். அவதாரம் செய்ததின் பயனைத் தமிழிலே ஒரு இதிகாசம் ஏற்படட்டும்.—அதைத் தமிழர்கள் வாசித்து இன்புறட்டும்" என்பதற்காகத் திருமால் இராமாவதாரம் செய்தான் என்பதும் சரியில்லை. பின் எதற்காக அவதரித்தான்? கம்பனின் கவியமுதத்தை கேட்டுக் களிக்கவேண்டும் என்ற ஆர்வத்தினாலேயே திருமால் அவதரித்தான் என்று தேசிக விநாயகம் பிள்ளை திட்டமாகக் கூறுகிறார்.

"கம்பன் க்வியின் களியமுதம் உண்டிடமால்
அம்புவியில் வந்திங் கவதாரம் செய்தான்."

இவ்வித பெருமை வாய்ந்த கம்பராமாயணத்தை எரித்துவிட எண்ணும் ஒரு சில வாதிகளே! ஏன்—எங்கள் உயிரையும் நாகரீகத்தையுமே எரித்து விடுங்களேன்! அட தமிழா!

# எது, தாய்மொழி?

(வித்துவான்-எம். சாம்பசிவம்.)

மொழிப்போரும், மொழியில்-இசைப்போரும், மொழியைப் பேசுவதிலும்—எழுதுவதிலும் உள்ள முறைப்போரும் மலிந்துபோன இந்தக் காலத்திலே, முதலில், 'எது, தாய்மொழி?' என்று, அலசிப்பார்த்து விடுவதும் அவசியமல்லவா? ஆனல், இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டாலென்ன?' என்பதுபோல், 'தாய்மொழி செழித்தாலென்ன? அன்னிய மொழிக்கேதான் நாம் ஆக்கங் கொடுத்தாலென்ன? இரண்டும் ஒன்றுதான்.' என்ற வெட்கங் கெட்ட கொள்கை யுடையார்க்கு இந்த ஆராய்ச்சி அவசியமில்லை.

தாய்—யார்? பெற்றவளா? வளர்த்தவளா? பெற்றவளுந் தாய்தான்; வளர்த்தவளும் தாய்தான்! அடைமொழி யில்லாமல், 'தாய்' என்று நாம் கூறும்போது அச் சொல், இரு தாய்மார்களை யுந் தடை யில்லாமல் குறிக்கின்றது. இன்ன தாய் என்று நாம் பிரித்துக்கூற விரும்பும்போது 'நற்ருய்' அல்லது 'பெற்ற தாய்' என்றும், 'செவிலித்தாய்' அல்லது 'வளர்ப்புத் தாய்' என்றும் கூறுகிறோம்.

இது, 'நாட்டு வழக்கம்' என்று தள்ளி விடுவதற்கில்லை; தாழ்ந்த மக்கள் முதற்கொண்டு, உயர்ந்த மக்கள் வரை—இந்த உலகின் எம் மூலையிலும், எம்மொழியிலும்—இன்னுங் கேட்டால்—மிருகங்களுக் குள்ளும் உள்ள ஓர் பொதுநிலை, இது. ஆகவே, இந்த வகையில் 'சொந்தத் தாய்', 'மாற்றுந் தாய்'மார்களும் தாய்ப்பகுதியினரே யாகிருர்கள்.

மற்ருெரு முக்கிய விஷயம். நாலாவது யுகமாகிய இந்தக் கலியுகத்திலே, 'தாய்' சம்பந்தமாக விஷயந் தெரிந்தவர்கள் எழுத ஆரம்பிப்பார்களே யானல், எத்தனைப் பிரிவாகப் பிரித்து எப்படி எப்படி எழுதுவார்களோ? அதை வரையறுத்துக் கூற முடியாது. ஏனெனில், 'தாய்' என்று உரிமை கொள்ள அத்தனைச் சுலப வழிகள், இருக்கின்றன—இருந்து கையாளப்பட்டு வருகின்றன இக் கலியுகத்திலே!

அதில் ஒன்று கூற விரும்புகிறேன். தற்போது இம் முழு உலகத்துள்ளும் எது—இல்லை—எவை நாகரிகத்தில் சிறந்தனவாகக் கருதப்படுகின்றனவோ, அந்த நாகரிக நாடுகள்—தேசங்கள் சிலவற்றுள்ளும், பெற்ற நற்ருய்களுக்குக் குழந்தைகளிடத்தில் அதிக அன்பு இருக்கின்ற காரணத்திஞலோ, வேறு எந்த உயர்ந்த நோக்கங்களிஞலோ குழந்தை பிறந்த மறு நிமிஷத்திலேயே அக் குழந்தையை வேறு ஒருத்தியிடம் கொடுத்து வளர்க்கச் செய்கிருர்கள். பாவம்! அக் குழந்தைகளும் செவிலித் தாயையே, 'நற்ருய்' எனக் கருதிக் கபடம் நீங்கி, உயிர் வாழ்கின்

றன. அந்த வகையில் நோக்கின் உண்மையாகப் பெற்ற தாயினும், வளர்ப்புத்தாயே சிறந்தவள் ஆகின்றாள். நற்றாய், அக் குழந்தைகளை அவ்வளவு முக்கியமாகக் கருதாததால் அவள், செவிலித் தாயினும் தாழ்ந்தவள் ஆகின்றாள்.

இதனால், குழந்தை வளம் பெறவும், உயிர் வாழவும் எவளொருத்தி செவிலியா யமைந்து, ஆவன புரிகிறாளோ, அவளே, அக் குழந்தைக்குப் 'பிரதான தாய்' எனின், அது மிகையாமோ? அதனால், அக் குழந்தை வளர்ந்து. வாழ்க்கையைத் தொடங்கும்போது அது, தன் நற்றாயினும் தன் வாழ்நாளில் பிரதானமாயிருந்த வளர்ப்புத்தாயிடம் அதிகம் அன்பையும், கடமையையும் செலுத்துதல் எங்ஙனம் தவறாகும்?

அதேபோல், ஒரு தமிழனுக்குத் தாய்மொழி, தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, வங்காளம் முதலிய எல்லாமுமாகலாம்; ஆனால், தமிழைப்போல ஒரு தமிழனுக்கு மற்ற மொழிகள், அம்மொழி வழங்கும் நாடாகிய் பெண்கள், வளர்ப்புத்தாயாய் அமைந்து, அவர்களால் கொஞ்சிக் குலாவப்பட்டிருக்க வேண்டும்! இல்லையேல், தமிழனுக்குத் தாய்மொழி, தமிழ் ஒன்றேதான்.

அதே போல், ஓர் தெலுங்கனுக்குத் தெலுங்கு, தாய்மொழி. அந்தத் தெலுங்கன், தன் தாயாகிய ஆந்திரத்தை விட்டு, தமிழ் நாட்டில் வந்து, தமிழ்நாட்டைச் செவிலித்தாய் போல் கொண்டு, தன் செவிலித் தாயால் இளமையிலிருந்தே கொஞ்சிக் குலாவிச் சீராட்டிப் பாலூட்டப் பெற்று, அவள் மொழியையும் மழலைச் சொற்களால் பேசிக் கற்று வளர்ந்தவனாயின், அவன் தாய் மொழி, தமிழும் ஆம்!

ஆகவே, ஒருவன் தன் தாய் நாட்டை விட்டு, அன்னிய நாடொன்றிற் சென்று நிலைத்து, குழந்தை குட்டிகளோடு வேரூன்றி விடுவானேயானால், அவனுக் கில்லாவிட்டாலும், அவன் வழித்தோன்றல்களுக்குக் கட்டாயம் அந்நாட்டு மொழி வளர்ப்புத் தாய் மொழியாகி விடுகிறது. ஆனால், வளர்ப்புத்தாய் மொழியை வெறுப்பவர்களும் உண்டு; அந்த நன்றி கொன்ற நாய்கள்—இல்லை; தவறிவந்து விட்டது; அதற்காக வருந்துகிறேன்—அவர்கள், நாடோடி (நாடு+ஓடி) கள்; நாம் ஒன்றுஞ் செய்வதற்கில்லை. எனினும், வளர்க்குந் தாய் மொழியை உயர்வாகக் கருதுபவர்களும் இருக்கிறார்க ளல்லவா?

எனவே, இந்த முறையில் இன்று தமிழ் நாட்டின் பேரெல்லைக் குட்பட்ட யாவருக்கும் தாய்மொழி தமிழ் ஒன்றே என்பதில் ஐயமில்லை. ஏனெனில், இவர்கள் யாவரும் இன்று தமிழ்த் தாயின் அமிழ்தூட்டும் கரங்களிலே கிடந்து, கொஞ்சிக் குலாவி மகிழுகிறார்கள். இவர்களின் பேச்சு, தமிழ்த்தாய் கற்றுக் கொடுத்தது! இவர்களின் வளப்பம், தமிழ்த்தாயின் கைத்திறம்! இவர்கள், வைது கொள்வதுகூட தமிழிலே தான்!

அதனால், எந்தத் தாய் நம்மைப் பெற்றாளோ, அந்தத் தாய் பேசும் மொழி, ‘தாய் மொழி’ என்பது தவறு! எந்தத் தாய், நம்மைப் பெற்றது முதற்கொண்டு நம்மிடம் நெருங்கவில்லையோ—பேச வில்லையோ—பேசிக் கற்றுக் கொடுக்க வில்லையோ, கொஞ்சிக் குலாவி, விளையாட வில்லையோ அந்தத் தாய் மொழியைத் தாய்மொழி என்பதினும், நாம் உதித்ததுமுதல், நம்மை இரு கரங்களாலும் ஏந்தி வளர்த்துக் கொஞ்சிக் குலாவிய தாயின் மொழியே “தாய் மொழி” என்பது பொருளுடைய தாகும் என்பது என் கருத்து.

அதனால், தமிழ் நாட்டிலுள்ள மற்ற நாட்டினர்கள் (இன்று இருந்து நாளை, மற்றுஇனும் ஓடி விடுபவர்களைத் தவிர—அதாவது, இங்கு வந்து பரம்பரையாக நிலைத்து விட்டவர்கள்) எல்லோரும், தமிழைத் தாய் மொழியாக ஓம்புவதில் பெருமை இருக்கிறது.

தமிழ் நாட்டிலிருந்து கொண்டே, தமிழ் மொழிக்கும், தமிழிசைக்கும், தமிழ் வளர்ச்சிக்கும் ‘முட்டுக்கட்டை’யான செயல் புரியும் கன்னெஞ்சர்கள், தன் தாயையும், தாயின் சீர்த்தியையும், தாயின் நலனையும் அழிக்கும் மாபாதகர்களாகின்றார்கள் என்பது ஒரு தலை.

தாயை மகன் வெட்டிச் சாய்ப்பது போல், தமிழருள்ளேயே ஒரு சிலர், தமிழை வெறுத்துப் புறங்கூறி, அழிவு செய்கிறார்களே என்றால், அதற்குக் காரணம்; சுத்தத் தமிழ் இரத்தம் இல்லாமையும், போதிய ஆராய்ச்சி இல்லாமையும், அன்னிய மொழியில் கொண்ட போலி மோகமுந் தாமென்று நான் கூறுவேன். ஆதலின், உணர்ச்சி உள்ளவர்களுக்கே உரியது, இத் தாய் மொழிப் பற்று! நிற்க.

முடிவாக: ஒவ்வொரு மனிதனும், தாய் மொழி இன்னதென்று தனித்திருந்து ஆராய்ந்து கொள்வானானால், அவன், எண்ணுவதும் உண்மையாகத் தாய் மொழியிலேயே எண்ணுவான்—எழுதுவான்—பேசுவான்—பாடுவான்! இல்லையேல், குறுகிய மனப்பான்மையோடு தப்பான கொள்கைகளுக்கும், முரண்பாடுகளுக்கும் இருப்பிடமாவான். அதனால் அவன், பெரும்பாலாரால் புறக்கணிக்கப் படுவதோடு, உள்ள அறிவையும் இழந்தவனாகின்றான். அதிகம் ஏன்? இவற்றை நிரூபிக்கும் எதிர் காலமும், நெருங்கி விட்டதென்றே சொல்ல வேண்டும். அப்போது எல்லோரும் உணர்ந்து கொள்வது கடினம் இல்லை யல்லவா?

---

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### 16. சனி உலகம்—அதன் பால் மதிகள்

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

நில வுலகின் சந்திரனை ஒத்து—ஆனால், இவை சனிக்கு எதிராக ஒரு புறத்தை மட்டும் காட்டிய வண்ணம் அதனைச் சுற்றி வருகின்றன. அவற்றுள் ஒன்று மட்டும் எதிர் வசமாக சனி உலகைச் சுற்றி வருவ தாகும். இவை அனைத்தும் உஷ்ணம் மிகவும் தணியப் பெற்றனவாய் மிகவும் குளிர்ந்துவிட் டிருக்கின்றன. நம்முடைய சந்திரன் நமக்கு அளித்துவரும் ஒளியைப் போலவே சனி உலகின் உபக்கிரகங்கள் என்று சொல்லப் பெறும் அந்தப் பால்மதிகளும் ஒளிவீசி வருவனவாம். ஆனால் நம்முடைய நிலவுக்கு இருக்கும் தேய்வும்—வளர்ச்சியும் அவற்றிற்கு இருக்கவில்லை யென்றே தெரிகிறது. அவற்றின் ஒளி அவற்றிற்கு இயல்பாக உள்ள ஒளி அன்று; மற்று, நில வுலகின் சந்திரனைப் போலவே அவையும் அயல் ஒளி பெற்றுப் பிரதிபலிப்பனதான் என்கின்றனர். சனி உலகில் ஏக காலத்தில் பல நிலாக்கள் காட்சிக் குரியனவாக விருக்கும். ஒரு நிலவின் இன்பமே நாமறிந்தது. பல நிலவுகள் ஏக காலத்துத் தோன்றித் தரும் இன்பத்தை என்ன வென்பது?

உபக் கிரகங்கள் என்னு மிப் பால் மதிகளில் பெரியன இரண்டாயி ரத்து அறுநூறு மைல் குறுக்களவு கொண்டவை. அவற்றுள் சிறியன ஐம் பது மைல்கள் குறுக்களவு உடையனவென்று கணக்கிட் டிருக்கின்றனர்.

"வியாழனுடைய பால் மதிகளிற் (உபக் கிரகங்களிற்) பெரிய மூன்று ஒத்து சனியின் மூன்றைக் கூறலாம். டைடன் (Titan) என்னும் மதி ஒன்று நில வுலகின் மதியைக் காட்டினும் பெரியது. ரியா (Rhea) ஐயா பெடஸ் (Iapetus) என்னு மிவ் இரண்டும் நூறு-நூறு மைல்கள் குறுக்களவு கொண்டன. இதர ஐந்தும் எண்ணூறு அல்லது தொள்ளாயிரம் முதல் இருநூறு மைல் வரை பலதரத்துக் குறுக்களவு உடையனவாம்" என்பது ஒருவருடைய கணக்கு. இதன்படி சனி உலகிற்கு பத்து உபக் கிரகங்கள் என்று அறியக் கிடக்கிறது. போபீ (Phoebe) என்னும் ஒரு மதி கி. பி. 1898-ம் வருஷத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. இதன் குறுக்களவு ஐம்பது மைல்களாகும்.

### முக்கியத்துவம் அல்லது சிறப்புக்கள்

இவ்விதம் மதி வளையங்களுக்கு நடுவில், இதுவரை கண்டு பிடிக்கப்பட் டிருக்கும் ஒன்பது பெருமதிகள்—அல்லது உபக்கிரகங்களையும், இன்னும் காணாத—இருக்கின்றன வென்று நம்பப்படுகிற பல பல கோள்களையும் 'சனி குடும்பம்' என்று மதிக்கும்படி தன்னகத்து (தன்னுடைய ஆதிக்கத் துள்) கொண்டிருக்கும் சனிப் பேருலகம் பலன் தரும் கோள்கள் யாவினும் அதி முக்கியங் கொண்டிருக்கிறது. கிழக்கிலும்—மேற்கிலும் பல பாக நிபுணர்கள் (Wellversed in Predictive Side) தங்கள் அனுபவங்களிலும்-அவதானங்களிலும் கண்டன பலவற்றையும் பொறித்து வைத்திருக்கின்ற னர். அவைகளுக்கு இன்றைய (ஆராய்ச்சி) அறிவும் ஏற்கும் விதம் தக்க விளக்கங்கள் காணப் பெற்று வருகிறது. அதற்குத் துணை செய்யும்

ஆராய்ச்சித் துறையின் பாராட்டத்தக்க விவரங்களை அடுத்த இதழில் காணுவோம்.

இப்பொழுது, அன்றும்-இன்றும் இதற்குக் கற்பிக்கப்பட் டிருக்கும் முக்கியத்துவம் அல்லது சிறப்புக்களை அறியலாம். வெகுகாலமாக சூரியனைச் சுற்றி ஓடும் கோள்களில் சனிதான் இறுதியானது என்று கருதினார்கள். சனி அண்டத்தைக் கண்டபோதே பிற கோள்கள் எவற்றினுக்குமில்லாத பல அம்சங்கள் அதன் காட்சியிலேயே அதிசயத்திற் குரியவிதம் அவர்களுடைய குறிப்பிற்கு வந்தன. பின்னர், சனிக்கு அப்பாலும் சில பெருங் கோள்களைக் கண்டனராயினும், சனிப் பேருலகின் சிறப்புக்களுக்கு மிகக் குறைந்தனவாக அவை இருந்தன. அத்துடன், சனி உலகைப் பற்றி மேலும் தெரிய வேண்டிய பல உள்ளன வென்று கருதும்படி அவர்களைத் தூண்டிய வண்ணம் இருக்கின்றது. இவ்வாறு மேற்கில் சனியின் முக்கியங்களை ஆராய்ந்து வருவதில் மிகவும் அக்கறை காட்டப்பட்டு வருகிறது. இத்தகைய நிலைக்குக் காரணம் மனித வாழ்க்கையில் நேரும் சம்பவங்களுக்கும் - சனிக்கோளின் செல்வாக்கு அல்லது ஆதிக்கத்திற்கும் நெருங்கிய சம்பந்தம் இருப்பதாக உணருவதே யாகும்.

சனிக் கோளின் எத்தகைய சிறிய சம்பந்தமும் வாழ்க்கையில் நேரும் சம்பவங்களுடன் இணைக்கப் பெற்றிருக்கின்றது. சனி ஆதிக்கம் அல்லது செல்வாக்கின் சம்பந்தம் வாழ்வில் முக்கியமாக தட்டுத் தடைகளையும்-சித்திகளில் தாமசத்தையும் - மிகவும் துக்ககரமான நிலைமைகளையுமே தருகின்றது எனப் பெரும்பாலும் கருதப்படுகின்றது. இதனால், அதனை, **பாபக் கோள் (Malific Planets)** என்றனர். இதன் சம்பந்தம் யாரும் அஞ்சத்தக்க பலனை நிகழ்த்தும். எவ்வளவு பெரிய மேதாவியையும்-துறவி-ஞானி இவர்களையுங்கூட இதன் பலன் திகைக்கும்படி செய்து விடும். எனவே, வாழ்வின் பிரகாசத்திற்கு எதிரான அதன் சக்திகளை ஆராய்ந்துவிட முனைந்தனர்.

உலகில் நாம் காணும் எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாக சனிக் கோளின் செல்வாக்குத்தான் முதல் இடம் பெறுகின்றது. இதில், ஓரளவு உண்மை இருந்த போதினும், அறிஞர்கள் இதன் செல்வாக்குந்தான் இகபரங்கள் இரண்டினும் எய்தத்தக்க தூய பலன்களுக்கும்-அதற்கு அப்பால் சொல்லப்படுகிற நித்தியமான கைவல்ய நிலைக்கும் முக்கியங் கொண்டது என்று அறிந்து வைத்திருக்கிறார்கள். இவ்வழி - பரிசுத்த கோளமாக சனியை மதிக்கின்றனர். இதன் செல்வாக்கு வாழ்வின் நெறியை சத்திய சோதனையில் நேர்மைக்கும்-நிரந்தரமான சித்திகளுக்கு மாகச் செலுத்துகின்றது என அவர்கள் காணுகின்றனர். பரிசுத்தம் - தியாகம் - தன்னல மறுப்பு-உண்மை அன்பு-தூய்மையின் பேருணர்வு இவை யெல்லாம் இதன் பலனாகின்றதாம்.

பெரும்பாலோர் மதிக்கும் தீயபலன்கள் சனிக் கோள் வானத்தே இடம் பெறும் ராசிகள்-அவற்றுள் சில நக்ஷத்திரங்களின் சம்பந்தங்களில் தான் நிகழுவன. உண்மையில் அத் துன்பங்கள் - தொடர்ந்த தோல்விகள் ஒவ்வொன்றும் அளவில் வெற்றி இன்பத்திற்குச் செல்லும் படிகளாகு மென்னலாம். தாங்க முடியாத துன்பங்களால் அதனைத் தீக்கோள் என்றாலும், நற்பலன்களில் சித்திகளுக்கு எல்லையற்ற-அதாவது வரையில்லாத பெருஞ் செல்வாக்கு சனிப் பேருலகிற்குத்தான் இருக்கின்றதாகும்.

நலந் தருவன வென்று கூறும் சுபக்கோள்கள் **(Benefic Planets)** எதனாலும் நிகழ்த்த முடியாத பெருநலன்களை-பெறுவதற்கரிய வெற்றிகளை -

# 'ஸோடா வாட்டர்'

(கே. ராஜாராம்.)

நீண்டதூரம் நடந்து வந்து களைப்பாயிருக்கும்போதும், வேலை செய்து அயர்வுற்றிருக்கும் போதும், தாகம் எடுக்கும்போதும், வெற்றிலைபாக்குக் கடைக்குச் சென்று, "சோடா வாட்டர்" என்று கேட்டு வாங்கிக் குடிக்கிறீர்கள். இவ்விதம் நீங்கள் வாங்கிக் குடிப்பது சாதாரண விஷயந்தான். ஆனல், சற்று யோசிப்பீர்களானுல், வேடிக்கையைக் காண்பீர்கள். உங்களுடைய உடம்பிலிருந்து கழிவு என்று வெளியேற்றுபவைகளுக்குத் தான் காசு கொடுத்து ஸோடா வாட்டராக வாங்கி உட்கொள்ளுகிறீர்கள் என்றல் வேடிக்கையாகத் தோன்றவில்லையா?

நீங்கள் விடும் ஒவ்வொரு மூச்சிலும் உள்ள பொருள்கள்தான் ஸோடா வாட்டரிலும் இருக்கின்றன. ஸோடா வாட்டர் எதெது சேர்ந்தது என்பதை நீங்களே இலகுவான முறையில் தெரிந்து கொள்ளலாம். ஸோடா பாட்டிலை உடைத்தபின் (சில்லுச் சில்லாக அல்ல) அப்படியே சிறிதுநேரம் வைத்திருங்கள். வாயு முழுவதும் வெளியேறியபின் குடித்துப் பாருங்கள். அது சாதாரண ஜலம்தான் என்பதைக் காண்பீர்கள்.

ஸோடா வாட்டர் தண்ணீரும், ஒரு வாயுவும் சேர்ந்தது. இந்த வாயுவும் காற்றைப்போல் கண்ணுக்குத் தெரியாது. ஆனல் காற்று அல்ல இது. இதை நிரூபிக்க ஒரு பரிசோதனை. அதாவது: ஸோடா பாட்டிலை உடைத்தவுடன் எரியும் நெருப்புக்குச்சியை பாட்டிலுக்குள் (தண்ணீரில் பட விடாமல்) கொண்டு போங்கள். நெருப்பு அணைந்து விடும். அணையச் செய்வது இந்த வாயுவின் வேலைதான். இந்த வாயு கனமானது. கொஞ்சம் உப்புக் கரித்துக் கொண்டிருக்கும். ஸோடா குடிக்கும்போது 'சுறு சுறு' என்று இருப்பதற்குக் காரணம் இவ்வளவுதான். இவ் வாயுவின் பெயர் கரியமல வாயு (Carbon di Oxide) என்பது.

ஸோடா வாட்டரில் கரியமல வாயு, தண்ணீர் என்ற இரண்டு பொருள்களும் இருக்கின்றன என்பதை நிரூபிக்க இரண்டு இலகுவான பரிசோதனைகள் செய்யவேண்டும். இப் பரிசோதனைகளைச் செய்ய பெரிய சோதனைச் சாலை (Laboratory) எதுவும் வேண்டியதில்லை. உங்கள் வீட்டிலேயே செய்து பார்க்கலாம்.

முகம் பார்க்கும் கண்ணாடியை எடுத்துக்கொண்டு, அதை உலர்ந்த துணியால் நன்ருகத் துடையுங்கள். பின் கண்ணாடியின் மீது மூச்சு விடுங்கள். கண்ணாடியில் சில சிறு நீர்த்துளிகள் பனிப்படலம் போலப் படர்ந்

---

கீர்த்தி மேன்மைகளை சனிக் கோளின் ஆதிக்கமும் - செல்வாக்கும் சரியாய் நிகழ்த்துகின்றது. உச்சிவானத்துச் சூர்யன் காய்வதைப்போல அதன் பலன்கள் தொடங்கி, 'மாசில்வீணை-மாலை மதியம்-வீசு தென்றல்-வீங்கிள வேனில் - மூசு வண்டு அறை பொய்கை' ஆகிய இன்ப நிலையிற் சேர்க்கின்றது சனியின் பலன் என்று அறிஞர்கள் உணர்த்துகின்றனர்.

எனவே, சனிப் பேருலகம் பலன் நிகழ்த்துவதில் மூக்கியம் பெறும் மேலான சிறப்புக்களுக் குரியதாக ஆகின்றது எனத் தெரிகிறது.

திருப்பதைக் காணலாம். இதிலிருந்து நாம் விடும் மூச்சில் நீர் இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்.

அடுத்த பரிசோதனை, தெளிந்த சுண்ணாம்புத் தண்ணீரை ஒரு பாத்திரத்தில் எடுத்துக் கொள்ளுங்கள். பின், ஒரு காகிதக்குழலின் மூலம் தண்ணீருக்குள் ஊதுங்கள். தெளிந்த சுண்ணாம்புத்தண்ணீர் பால் நிறமாக மாறுவதைக் காணலாம். இது நாம் வெளிவிடும் மூச்சில் கரியமலவாயு இருக்கிறதென்பதை நிரூபிக்கிறது.

ஸோடா வாட்டரில் இந்தக் கரியமலவாயு கரைக்கப்பட்டு இருக்கிறது. ஸோடா வாட்டரிலுள்ள தண்ணீர் கொள்ளக்கூடிய அளவுக்குச் சில மடங்கு அதிகமாக கரியமலவாயு கரைக்கப்பட்டிருப்பதால்தான், பாட்டிலை உடைத்தவுடன் இவ்வாயு வெளிச் செல்கிறது. ஒரு பங்கு நீரில் சுமார் நான்கு பங்கு வாயு சேருவதால் ருசி ஏற்படுகிறது.

எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான அமுக்கம் (**Pressure**) கொடுக்கப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு வாயு கரைக்கப்பட முடியும். உஷ்ணம் எவ்வளவுக் கெவ்வளவு குறைவாயிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு வாயு கரைக்கலாம்.

ஸோடா பாட்டிலை உடைத்தவுடன் அமுக்கம் இல்லாமல் போவதால், அடைபட்டிருந்த வாயு 'புஸ்......' என்ற சப்தத்துடன் வெளிச் செல்கிறது. அப்பொழுது தண்ணீரின் மேல் பரப்பிலுள்ள வாயுக் குமிழிகள் (**Bubbles**) சீக்கிரம், நேரடியாக வெளியேறுகின்றன. தண்ணீரின் அடியிலுள்ள குமிழிகள் மெதுவாக மேல் பரப்பிற்கு வந்து, பின்னர் தப்பி ஓடுகின்றன. தாங்களாகவே தப்பிச் செல்லச் சக்தியற்ற சிறுசிறு வாயுக்குமிழிகள், ஒன்றுகச் சேர்ந்து பெரிதாகிய பின் வெளியேறுகின்றன.

கரியமல வாயுவினால்தான் ஸோடா வாட்டர் ருசியாக இருக்கிறது என்றோம். இந்த வாயு சீக்கிரம் வெளியேறிச் செல்லாமலிருக்க வேண்டுமானால், கொஞ்சம் 'சர்பத்' அல்லது ஏதாவது 'ஸிரப்' (**Syrup**) சேர்த்துக்கொள்ளலாம். அப்பொழுது, வாயுக்குமிழிகள் நீரின்மேல் பரப்பில் நுரைத்துக் கொண்டு, ஒன்று சேர்ந்திருக்கின்றன. வேண்டிய பழங்களின் சத்தைச் (**Essence**) சேர்த்து ஸோடா கலர் தயாரிக்கப்படுகிறது.

என்னுடைய கட்டுரையை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன். ஏனென்றால், இவ்வளவுதூரம் படித்து அயர்வுற்றிருப்பீர்கள் அயர்வு தீர, ஓடிப்போய் அருகாமையிலுள்ள வெற்றிலை பாக்குக் கடைக்குச் சென்று 'ஸோடா வாட்டர்' குடித்துவிட்டு வாருங்கள்!



# பதுமமும் பனித்துளியும்

(மதி. இராம - நமசிவாயம்.)

காவிரி யாற்றின் கரையின் மருங்கே
பூவிரிந் தொளிரும் பொய்கை யொன்றினில்
புலருஞ் சமயம், பொலிந்து விளங்கும்
மலரும் மரையில் மகிழ்வொடு பனித்துளி
முத்தென வீழ முருகவிழ் பதுமம்
இன்முகத் தோடு எழில்பனித் துளியுடன்
பின்வரு மாறு பேசலுற் றதுவே !

பதுமம்:—

பனித்துளி மணியே ! வருக !! பண்பொடு
இனிதமர்ந் திடுக ! என்னித ழணைமிசை !

பனித்துளி:—

பதுமச் செல்வி ! பன்முறை வணக்கம்
எங்க ளினத்தார் எண்ணருந் தீமை*யை
உங்கட் கிழைப்பதை உணர்ந்தும்; என்னை
வருக ! வென்று, வரவேற் பளித்து
பெரு உபசாரம் பேணுதல் ஏனோ ?

பதுமம்:—

குளிர் நுண் துளியே ! கூறுவேன்; பெரியோர்
அளியொடு நம்மிடம் அடைந்திடில் மகிழ்ந்து
உபசரிக் காதவர் உலகினில் உண்டோ ?

பனித்துளி:—

நன்று ! நன்று !! நளினத் தேவீ !
பெரியோர் ! எவர் பெரியோர் ? யானோ !
உருவினுஞ் சிறியேன் ! உயிரினுஞ் சிறியேன் !
மருவிய உலக வாழ்வினுஞ் சிறியேன் !
என்பெயர் கேட்டால் எவரும் நடுங்குவர் !
உன்பெயர் கேட்கிலோ ! உள்ளும் புறமும்
ஒத்த மகிழ்ச்சியொடு உவகை கொள்ளுவர் !
இங்ஙன மிருக்க என்னை மிகவும்
பெரியோ ரெனவும் பேசிடத் தகுமோ ?

பதுமம்:—

பொன்னென மிளிரும் புதுநீர்த் து[illegible] !
உன்னரும் பெருமை உணராய் ! [illegible]ன்,
அருகு நுனியில் அமைந்த காலையி[illegible]ல்
வருமொரு ஞாயிறு வளரொளி தன்[illegible]
பன்னிறங் கொண்டு மின்னும் பொழு[illegible]
ஒன்பது மணிகளும் உனக்கொப் பாமோ !

---

* தீமை=தாமரைப்பூ பனியால் கருகுதல்.

அ, ஆ! உன்றன் அரும்பெருங் காட்சியை !
என்னென் றுரைப்பேன் ! மின்னிய ஞான்று
உடம்பெலாங் கண்களாய் ஓர்ந்து நோக்கினும்
இடம்பெறும் உன்னெழில் எழுதிடல் முடியுமோ ?

பனித்துளி:—

பங்கயத் தலைவி ! பகருவேன் ! கேளாய் !
தங்குநீ ருலகில் சான்றோ ரென்னும்
நாவிற் சிறந்த நாவல ருடைய
பாவிற் சிறந்து பளிங்கென மிளிரும்
நற்பெரும் பேறு நானோ பெற்றனன் ?
பெண்களின் அங்கமும் பிறவும் பெற்று
எண்கொளாச் சிறப்பு யானோ எய்தினேன் ?

பதுமம்:—

சூடா மணியாய்த் துலங்கிடுந் துளியே !
பீடும் வேண்டுமோ ? பெட்பிலா எனக்கு ;
கல்வியிற் சிறந்த கம்ப நாடனை
பல்லோ ரறியப் பண்டொரு நாள்நீ
கருவ மடக்கிய கவின்கெழு செய்தியை
தெருவில் ஆடும் சிறுவரும் அறிவரே !

பனித்துளி:—

இதுவோர் சிறப்போ ? எளியேன் றனக்கு !

பதுமம்:—

பைஞ்சுடர் வீசும் பனித்துளீ ! நன்று;
ஐம்பொறி யடக்கி, அருஞ்செயல் புரிந்து,
தம்பெயர் நாட்டும் தனிப்பெரு மக்கள்.
சனித்தது உந்தன் தனியுள வன்றோ !

பனித்துளி:—

என்னள வென்று இயம்பினும்; தேவி !!
தன்னிலை யறியாது தங்கியே என்றும்
மன்னிய மக்கள் மாக்க ளாகிறார் !
அறிய உரைப்பேன் ! அதுவும் அன்றி ;
"பொறி" வாழிடமெனப் புகழ்வது எவரை ?

அதனால்,

பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர் !
சிறியோ ரெல்லாம் சிறியரு மல்லர் !
கால நிலையால் கருதிடில், இவர்கள் !
கோல மாறிக் குணமும் இழப்பர்,
அவரவர் நிலையே ! அவரவற் கேற்றம்,
என்று சொல்லி எழில்மிகு பனித்துளி
* என்றின் ஒளியில் எழுந்தது வன்றே !

---

* என்று = சூரியன்.

# கணேசனின் தாயார்

(சி. குழந்தைசாமி.)

"பீஸ் கொடுக்கவில்லையென்று வாத்தியார் வகுப்பை விட்டுத் துரத்திவிட்டார், அம்மா" என்று சொல்லிக் காந்திமதியின் மடியில் முகத்தை வைத்துக்கொண்டு கண்ணீர் உகுத்தான் கணேசன்.

"அசடே, நீ என்ன இன்னும் பச்சைக் குழந்தையா? பதினைந்து வயதாகிறது. வெட்கமில்லாமல் அழுகிறாயே. இன்று ஒரு நாள் பள்ளிக்கூடத்துக்குப் போகவில்லையானால் ஒன்றும் கெட்டுவிடப் போவதில்லை. அப்பா உயிரோடிருக்கும்போது மாதாமாதம் ஒழுங்காகப் பீஸ் கொடுக்கவில்லையா? இப்போது அப்படி முடியுமா? எப்படியாவது நாளைக்குப் பணம் பார்த்துத் தருகிறேன்" என்று சொல்லிக் காந்திமதி அருமையுடன், கணேசனின் கண்ணீரைத் துடைத்தாள்.

"இன்றைக்குக் கையில் பணமில்லாமலிருக்கும்போது எப்படியம்மா நாளைக்கு வந்துவிடும்?" என்று கேட்டுவிட்டு கணேசன் திரும்பவும் விசித்து விசித்து அழ ஆரம்பித்தான். விதவையாகிய தன் தாயினால் அது சாத்தியமாகக்கூடிய காரியமல்லவென்பது அவனுடைய முழு நம்பிக்கை. ஆறாவது 'பாரம்' வரையிலும் வந்து, கடைசியில் பணமில்லாத காரணத்தால் படிப்பை நிறுத்தவேண்டியதாகின்றதே என்ற எண்ணத்தால் அவன் மிகுந்த சஞ்சலமடைந்தான். காந்திமதிக்கும் இதே கவலைதான். கணவன் உயிரோடிருந்த காலம் வரையில் அவள் எவ்வித கஷ்டமுமின்றி வாழ்ந்து வந்தாள். கணவன் இறந்து இப்போது இரண்டு வருஷங்களாகின்றன. இதற்குள் அவள் கையிலிருந்த சொற்பப் பணமும் நகைகளும் காலியாகிவிட்டன. இனிமேல் சாப்பாட்டிற்குக்கூட வழியில்லை என்றாகிவிடும். இந்த நிலைமையில் கணேசனின் படிப்புச் செலவுகளுக்கு அவள் என்ன செய்வாள்? மாதம் ஐந்தே கால் ரூபாய் வீதம் இன்னும் நான்கு மாதங்கள் பீஸ் கட்டியாக வேண்டும். சர்க்கார் பரீட்சைக் கட்டணம் என்று பன்னிரண்டு ரூபாய் வேறு கட்டியாகவேண்டும். வீட்டுச் செலவுகள் வேறு. காந்திமதிக்கு இன்னது செய்வதென்று தோன்றவில்லை. யாரிடமாவது கடனாகக் கொஞ்சம் பணம் கேட்கலாமென்றால் இந்தக் காலத்தில் யார் கொடுப்பார்கள்? ஏழைக்கிரங்கும் தன்மையுடைய பணக்காரர்களாவது இருக்கிறார்களா? அதுவுமில்லை. பள்ளிக்கூடங்களைப்பற்றிக் கேட்கவேண்டாம். உலகத்தில் எத்தனையோ விதங்களில் வியாபாரம் நடக்கின்றது. அவற்றில் பள்ளிக்கூட பரிபாலனம் ஒன்று. ஆகவே, பீஸ் கொடுக்காவிட்டால் அங்கே கணேசனை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். எனவே கணேசன் படிப்பை நிறுத்திவிடுவதைத் தவிர வேறு வழியிருப்பதாகக் காந்திமதிக்குப் புலப்படவில்லை.

"கணேசன் ரொம்பவும் புத்திசாலி. அவன் சர்க்கார் பரீட்சையில் திருவிதாங்கூர் சமஸ்தானத்திற்கே முதல்வனாகத் தேறுவான் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. அவன் அவ்வாறு தேறினால் மேற்படிப்புக்காக சர்க்காரே மாதாமாதம் இருபத்தைந்து ரூபாய் 'ஸ்காலர்ஷிப்' கொடுப்பார்கள். ஆகவே எப்பாடுபட்டாகிலும் அவனைக் கடைசிவரையிலும் படிக்க வைக்கவேண்டும்" என்று கணேசனின் உபாத்தியாயர்களில் ஒருவர் பாக்கியில்லாமல் எல்லோரும் காந்திமதியிடம் சொன்னதுண்டு. ஆனால் அவர்களில் ஒருவராவது கணேசனுக்குப் பண உதவி செய்ய முன்வரவில்லை. அவர்களிடம் கேட்டால், "நான் என்ன செய்ய முடியும்? மாதா மாதம் நூறு ரூபாய்க்குக் கையொப்பம் வைத்தால் ஐம்பது ரூபாய் தருகிறார் அந்த

மானேஜர். இந்தச் சம்பளத்தில் என் வீட்டுச் செலவே கழிவது மிகவும் கஷ்டம்'' என்று சொல்லிவிடுவார்கள்.

குருடன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படலாமா? கணேசனைப்போல் ஒரு ஏழைப் பையன் திருவிதாங்கூர் சமஸ்தானத்துக்கே முதல் மாணவனாகத் தேறினால் பெரிய பெரிய உத்தியோகஸ்தர்களுடைய மக்கள்—பள்ளிக்கூடத்தில் படிப்பதுபோக மாதாமாதம் இருபது முப்பது என்று 'டியூஷன்' 'பீஸ்' கொடுத்து வீட்டில் வேறு படிப்பவர்கள்—சும்மா இருப்பதா? பணக்கஷ்டத்தினால் கணேசனைப்போலுள்ளவர்கள் விலகினால்தானே உத்தியோகஸ்தர்களுடைய மக்களுக்கு நற்பெயருண்டு. அப்போதுதானே ஜனங்களும் இப்படிச் சொல்லிக்கொள்வார்கள்:—

"எல்லாரும் படிக்கிறார்கள் என்று இந்த 'ஹெட்டுக் குமாஸ்தா'வின் (Head Clerk) மகனும் படித்தானாம். ஒரு மாணவன் பரீட்சையில் முதல்வனாகத் தேறவேண்டுமானால் அவனுடைய தகப்பன் நல்ல மூளையும் புத்தி சக்தியும் உடையவனாக இருக்கவேண்டும் சார். பாருங்கோ, ஹைக்கோர்ட்டு ஜட்ஜ்————இருக்கிறாரே அவருடைய மகன் இந்த வருஷம் இ. எஸ். எல். ஸி. பரீட்சையில் சமஸ்தானத்திலேயே முதல்வனாகத் தேறி இருக்கிறானாம். பையனுக்கு என்ன வயதிருக்கும் என்று நினைக்கிறீர்கள்? பன்னிரண்டு வயதுகூட இன்னும் சரியாகத் திகையவில்லையாம்.''

பணமில்லாத காரணத்தால் தன் மகன் படிப்பை நிறுத்துவதற்கு காந்திமதியின் மனம் சம்மதிக்கவில்லை. எப்பாடு பட்டாகிலும் மகன் படித்தே தீரவேண்டும்; அவன் தன் வாழ்க்கையில் ஓர் உன்னத நிலைமையை அடையவேண்டும் என்ற முடிவுக்கு வந்தாள். பணமில்லாமல் இது நடக்கக் கூடிய காரியமா? ஏதும் கதியில்லா ஏழை விதவைக்கு இது எப்படிச் சாத்தியமாகும்?

கணேசன் தன் தாயைப் பார்த்து, "அம்மா! பண்ணையாரிடம் போய் நம்முடைய நிலைமையை எடுத்துச் சொல்லி, நமக்கு உதவி செய்யும்படிக் கேட்கட்டுமா?'' என்று கேட்டான். பண்ணையார் என்ற வார்த்தையைக் கேட்டதும் காந்திமதிக்குக் காதில் ஈயத்தை உருக்கிவிட்டதுபோலிருந்தது. தன் புருஷன் உயிரோடிருந்த காலத்தில் நடந்த சம்பவமொன்று இப்போது அவளுக்கு ஞாபகம் வந்தது.

குளத்தில் குளித்துவிட்டு வழியோடு போன தன்னைப் பார்த்து ஒரு நாள் அவர், "என்ன காந்திமதி! உன் புருஷன் வயற்காட்டிலிருந்து திரும்பி வருவதற்கு இன்னும் எவ்வளவோ நேரம் ஆகுமே. அதற்குள் என் வீட்டுக்கு வந்துவிட்டுப் போயேன். ரொக்கமாக நூறு ரூபாய் தருகிறேன்'' என்று சொன்னதைக் காந்திமதி இன்னும் மறக்கவில்லை. ஆகவே கணேசன் பண்ணையார் என்ற பெயரைச் சொன்னதும் காந்திமதியின் முகம் கறுத்தது. எண்ணங்கள் ஒன்றன்பின் ஒன்றாக எழுந்து அவளுடைய மனதில் குழப்பத்தை யுண்டுபண்ணின. காந்திமதி சிறிது நேரம் அப்படியே அசைவற்று உட்கார்ந்திருந்தாள். பிறகு அவள் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவள்போல் பெருமூச்சு விட்டுக்கொண்டு கணேசனைப் பார்த்து, "அந்தப் பண்ணையார் பெரும் கஞ்சப் பிரபு. அவர் எங்கே நமக்குப் பண உதவி செய்யப் போகிறார்? எதற்கும் போய்க் கேட்டுப் பார்'' என்றாள்.

அன்று சாயங்காலம் கணேசன் பண்ணையாரிடம் சென்று தன் நிலைமையை எடுத்துச் சொல்லி, தனக்கும் கொஞ்சம் பண உதவி செய்யுமாறு வேண்டினான். அதற்குப் பண்ணையார் கணேசனைப் பார்த்து, "வகுப்பில்

நீ நான் முதல் பையனாக இருப்பதாக அனேகர் என்னிடம் சொல்லி யிருக்கிறார்கள். ஆகையினால் உனக்கு உதவி செய்ய வேண்டியதுதான். நீ போய் உன் தாயாரை இங்கே ஏழு மணிக்கு வரச்சொல். நான் பணம் கொடுக்கிறேன்'' என்றார்.

கணேசன் மிகுந்த சந்தோஷத்துடன் வீடு வந்து தன் தாயாரைக் கட்டி அணைந்துக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தவண்ணம், 'அந்தப் பண்ணையாரைக் கஞ்சப் பிரபு என்று சொன்னாயே. அவர் எவ்வளவு நல்ல மனிதர்? நான் வகுப்பில் முதல் பையனாக இருப்பது அவருக்கு ஏற்கனவே தெரிந்திருக்கிறது. எனக்கு வேண்டிய உதவிகளெல்லாம் செய்வதாக அவர் சொல்லுகிறார். அவர் இப்போது நமக்கு உதவி செய்வாரானால் நான் இந்தப் பரிட்சையில் தேறி 'ஸ்காலர்ஷிப்' வாங்கி காலேஜிலும் படித்துக் கடைசியில் பி. ஏ., பரிட்சையும் தேறிவிடுவேன். அதற்கப்புறம் நான் நல்ல நிலைமைக்கு வந்துவிடுவேன். அப்போது நம்முடைய கஷ்டமெல்லாம் நீங்கி விடும்'' என்று சொல்லித் தன் தாயின் கரத்தைத் தூக்கித் தன் கன்னத் தோடு அணைத்துக்கொண்டான்.

இதைக் கேட்டதும் காந்திமதிக்கு உண்மையில் ஆச்சரியமாகவே இருந்தது. அவள் கணேசனின் தலையைத் தடவிக்கொண்டு, ''அவர் என்னடா சொன்னார்?'' என்று கேட்டாள். ''உன் தாயாரை ஏழு மணிக்கு வரச்சொல். பணம் கொடுக்கிறேன்,' என்று சொன்னாரம்மா'' என்றான் கணேசன். காந்திமதியின் தலை கிர்ரென்று சுழல ஆரம்பித்தது. ''என்ன! என்னையா வரச்சொன்னார்?'' என்று அவள் திரும்பவும் தன் மகனிடம் கேட்டாள். ''ஆம், அம்மா!'' என்று சொல்லிக்கொண்டு கணேசன் ஆனந்தக் கண்ணீர் வடித்தான்.

தன் மகனுக்கு இப்போது என்ன பதில் சொல்வதென்று காந்திமதிக்குத் தோன்றவில்லை. அவளுடைய மனதில் பொங்கி எழுந்த துக்கம் கண்ணீராக மாறி அவளுடைய கன்னங்களில் வடிந்தது. வெகு நேரம் வரையில் அவள் அழுதுகொண்டு நின்றாள். கணேசன் அப்போது அவளைப் பார்த்து ''எப்படி இன்னொருவரிடம் சென்று பணம் கேட்பது என்று நீ வெட்கப் படுகிறாயா? அம்மா! நான் படித்து மேல் நிலைமைக்கு வரவேண்டாமா? அதற்கு உதவி செய்வது உன் கடமையல்லவா? எனக்காக ஒருவர் பணம் தருவதாகச் சொல்லும்போது, அதை வாங்கித் தருவதற்கு நீ மனம் தயங்கலாமா? ஒருவரிடம் சென்று யாசிப்பது உண்மையில் வெட்கக்கேடுதான். ஆனாலும் அதை நீ எனக்காகச் செய்யக்கூடாதா?'' என்று கேட்டான். இந்த கேள்விக்கு காந்திமதி என்ன பதில் சொல்வாள்? ''சரி, நான் போய்க் கேட்கிறேன்'' என்று சொல்லிவிட்டு அவள் பண்ணையார் வீட்டுக்குச் சென்றாள்.

அன்றிரவு காந்திமதி பண்ணையார் வீட்டிலிருந்து திரும்பி வரும்போது மணி சுமார் பத்திருக்கும். அவளுடைய வருகைக்காக கணேசன் வீட்டில் ஆவலுடன் காத்திருந்தான். இரவு பத்துமணி வரையில் என்றும் படித்துக் கொண்டிருப்பவன் இன்று புஸ்தகத்தையே கையில் எடுக்காமல் தெருவாசலில் உட்கார்ந்து தன் எதிர்கால வாழ்க்கையைப்பற்றி இன்பக் கனவுகள் கண்டுகொண்டிருந்தான். காந்திமதி வந்ததும் அவன் ஆவலோடு எழுந்து தெரு வாசலில் வைத்தே, ''என்னம்மா ஆயிற்று? அவர் பணம் தந்தாரா?'' என்று கேட்டான். காந்திமதி அவனை வீட்டினுள் அழைத்து, ''ஆம். நூறு ரூபாய் தந்திருக்கிறார். அது உன் பெட்டியிலேயே இருக்கட்டும்'' என்று சொல்லி ரூபாயை கணேசன் கையில் கொடுத்துவிட்டு சமையற்கட்டிற்குப் போய்விட்டாள்.

# இன்றைய யுத்தத்தின் முடிவு

(R. சுந்தர விநாயகம்.)

இந்த யுத்தம் இன்றுவரை ஆச்சரியப் படத்தக்க முறையில் நடைபெற்று வந்திருக்கின்றது. ஏனென்றால் நினைத்ததற்கு மாறாகவே எல்லாம் நடந்திருக்கின்றன. உலகத்திற்கே முதன்மையா யிருந்ததும், எல்லோருடைய நம்பிக்கைக்கும் பாத்திரமா யிருந்ததுமான பிரான்சு ராணுவம் ஒரே மாதத்தில் அழிக்கப்பட்டது. பதினொரு ஐரோப்பிய நாடுகள் ஜெர்மானியரால் அடித்து ஆக்ரமிக்கப்பட்டன. கீழ்நாட்டில் பிரமிக்கத்தக்க முறையில் ஜப்பானின் ஆதிக்கம் பர்மா, மலேயா முதலிய நாடுகளில் ஓங்கிற்று. இத்தகைய சம்பவங்கள் நம்மை நேசநாட்டின் வெற்றியைப்பற்றி ஐயுறச் செய்வதும், அச்சு நாட்டிற்கு நிச்சயமான வெற்றி கிடைக்குமென்று நினைக்கச் செய்வதும் இயற்கையே.

இந்தியாவில் ஜப்பானின் ஆதிக்கத்தின் கீழ், நாடு செழிக்குமென்ற ஒரு கீழ்த்தரமான சுயநல எண்ணம் உலவிக் கொண்டிருக்கிறது. ஜப்பானியர்கள் இந்தியாவிற்கு வருவதன் ஒரே நோக்கம் இந்தியர்களுக்குச் சுயராஜ்யம் கொடுப்பதற்காகத்தான் என்று கூட சிலர் நினைக்கின்றனர். இத்தகையோரின் அறியாமையை விளக்க நாம் இங்கு முன் வரவில்லை. இப்போது யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் தேசங்களின் நிலைமையைச் சீர்தூக்கிப் பார்ப்போமானால், நேசநாட்டின் நிச்சயமான வெற்றியும், அச்சு நாட்டின் பூர்ண வீழ்ச்சியும் நன்கு புலப்படும். இஃதை ஒருவாறு ஈண்டு விளக்குவதே இக் கட்டுரையின் குறிக்கோளாகும்.

இந்த யுத்தத்திற்காக ஜெர்மன் தேசம் தன்னைச் சுமார் பத்து வருடங்களாகவே தீவிரமாக தயார் செய்து கொண்டு வந்திருக்கின்றது. யுத்தம் ஆரம்பித்தவுடனே தளவாட உற்பத்தியிலும், போர் வீரர்களின் எண்ணிக்கையிலும், அத் தேசத்துடன் நேசநாட்டினர் போட்டி யிட முடியவில்லை. டாங்குகளிலும் ஆகாய விமானங்களிலும், ஜெர்மனியிட மிருந்ததில், பத்தில் ஒரு பாகங் கூட பிரான்சு, இங்கிலாந்து தேசங்களிடம் அப்போது இல்லை. அவ்வாறாயின் பிரான்சுக்கு நேர்ந்தகதி இங்கிலாந்துக்கும் ஏன் ஏற்படவில்லை என்று வினவக் கூடும். ஜெர்மானியர் 1940-ம் ஆண்டு, அதாவது பிரான்சு தேசம் வீழ்ச்சி யடைந்த சமயம், இங்கிலாந்தில் இறங்கி யிருந்தால் இது ஒரு சமயம் முடிந்திருக்கலாம். ஆனால், அப்போது கூட ஆங்கிலேயர்கள், தங்கள் வீரத்தைச் செவ்விய முறையில் எடுத்துக் காட்டத் தவறினார்களில்லை. ஆனால், 1940-ம் ஆண்டு ஜூன்மாதம் அதாவது பிரான்சு யுத்த நிறுத்தத்திற்குப் பிறகு இங்கிலாந்து தேசம் யுத்த தளவாடங்களைத் தீவிரமாக உற்பத்தி செய்ய ஆரம்பித்தது. இத்துடன் பிரமாண்டமான அமெரிக்கப் போர்க்கருவிகளும், வந்து குவிந்தன. ஆகவே, இன்று நேசநாட்டினர், எதிரிக்குச் சமமான, ஏன்

எதிரியை விட தளவாட உற்பத்தியில் அதிகஞ் சிறந்து விளங்குகின்றனர். இத் தீவிர உற்பத்திக்குக் காரணம், நேசநாட்டினர்க்குள்ள இயற்கைப் பொருளாதாரச் சக்தியே. சென்ற யுத்தத்திலோ காலாட்படையே முதன்மை ஸ்தானம் வகித்தது. இன்று நடைபெறும் யுத்தத்தில், டாங்குகளும், ஆகாய விமானங்களுமே, முக்கிய போர்க்கருவிகளாக விளங்குகின்றன. ஆகவே, இக் கருவிகளின் உற்பத்தியின் அளவு ஒவ்வொரு நாட்டில் உள்ள உலோகக் கனிகளினின் றெடுக்கும், உலோகப் பொருள்களைப் பொறுத்ததாகவே இருக்கின்றன. அதன்படி தற்போது அமெரிக்கா தான் உலகத்திலேயே இயந்திர உற்பத்திச் சக்தியில் சிறந்து விளங்குகின்றது. உலகத்தில் எந்த நாடும் இயந்திர உற்பத்தியில் இதற்கு இணையாக மாட்டாது. உலக உற்பத்தியில், கந்தகம், அங்கு நூற்றுக்கு எண்பது பாகமும், 80%, பித்தளை நூற்றுக்கு முப்பத்தைந்து பாகமும், 35%, இரும்பு நூற்றுக்கு நாற்பத்தைந்து பாகமும், 45%, கிடைக்கின்றன. இம் மூன்று பொருள்களும் தான், டாங்குகள், ஆகாய விமானங்கள், யுத்த ஆயுதங்கள், செய்வதற்கு அத்தியாவசியமானவை. இன்னும் முக்கிய பொருள்களாகிற 'அலுமீனியம், நிக்கல், முதலிய உலோகங்களும், ரஷ்யா, இங்கிலாந்து, கனடா, பிரேஜில் முதலிய நாடுகளில்தான் தேங்கிக் கிடக்கின்றன. ஜெர்மனி, பிரான்சில் கிடைக்கும் இரும்பும், தன் நாட்டில் கிடைக்கும் நிலக்கரியும் தவிர, மற்ற முக்கிய பொருள்களுக்கு, மற்ற நாட்டின் உதவியைத்தான் எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. இவ் வுலோகப் பஞ்சமே, எதிரியின் போர்க்கருவிகளின் தற்கால உற்பத்தி உறுதியற்ற நிலையி லிருப்பதற்குக் காரணம். யுத்த ஆரம்பத்தில், ஆகாயப் போரில் நேச நாட்டினர், அதிக விமானங்களை இழந்தனர். ஆனால், இப்போது, நேசநாடு ஒரு விமானம் இழந்தால், ஜெர்மன் இரண்டும், ஜப்பான் நான்கும் இழந்து வருகின்றன.

சமாதான காலத்தில் உலக முழுமையும் உற்பத்தியாகும் மோட்டார் வண்டிகளில் முக்கால் பாகம் அமெரிக்காவால்தான் செய்யப்பட்டு வந்தது. அம் மோட்டார் தொழிற்சாலைகள் அனைத்தும் இப்போது டாங்குகள், விமானங்கள், கப்பல்கள், போர் லாரிகள் முதலிய யுத்தக் கருவிகளைத் தீவிரமாகச் செய்து முடித்து வருகின்றன. 1941-ம் ஆண்டு அக்டோபர் மாதத் தொடக்கத்தில் மாதம் ஒன்றுக்கு 2000 விமானங்களை அமெரிக்கா செய்து தந்தது. இப்போதைய மாத உற்பத்தி 5500 விமானங்களாக இருக்கிறது. ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான், இம்மூன்று நாடுகளும், சேர்ந்து உற்பத்தி செய்வதை விட இத்தொகை அதிகரித்திருக்கிறது. இத்துடன் இங்கிலாந்து ரஷ்யாவின் உற்பத்தியையும், சேர்த்தால் அச்சுநாட்டின் உற்பத்தி இரண்டானால் நேச நாட்டின் உற்பத்தி ஐந்தாக அதிகரித்திருக்கின்றது எனக் கணக்கெடுத் திருக்கின்றனர். தளபதி டிகால், ஜெர்மனியை முன்னேறித் தாக்கத் திட்டம் போட்டிருந்த டாங்கு, விமா

ணப் போர்க் கருவிகளின் எண்ணிக்கை பூர்த்தியாகி விட்டது. இப்போது தளவாடங்களை யாதொரு கஷ்டமுமின்றி போர் முனைக்குக் கொண்டு போவதுதான் முக்கியமான காரியம். இதற்குப் பெருங் கடற்படையைக் கொண்டு, கடல் எங்கும் ஆதிக்கஞ் செலுத்த வேண்டியது அவசியம். ஆனால், ஜெர்மனியோ, முன்பு நீர்மூழ்கிக் கப்பல்களால் நேச நாட்டிற்கனுப்பும் யுத்த தளவாடங்கள் நிறைந்த கப்பல்களை அழித்து வந்தது. சில சமயங்களில் நேச தேசங்கள் நாளொன்றுக்கு, ஒன்று, சில சமயங்களில் இரண்டு கப்பல்களுங் கூட இழந்து வந்தன. இப்போதோ அந்நீர் மூழ்கிக் கப்பல்களைத் தாக்கி அழிப்பதில் அதிக கவனம் செலுத்தப் பட்டிருக்கிறது. பிரமாண்டமான சுந்தர்லேண்டு (Sunderland) ஹட்சன் (Hudsor) என்ற ஆகாய விமானங்கள் சதா சமுத்திரங்களின்மேல் உலாவி, எதிரி நீர்மூழ்கிக் கப்பல்களைச் சிதறடித்து வருகின்றன. நிற்க, அமெரிக்காவில் முப்பது தொழிற்சாலைகளில், கப்பல் கட்டும் வேலை நடைபெற்று வருகின்றது. ஒவ்வொருநாளிலும், அங்கிருந்து நான்கு யுத்தக்கப்பல்கள் செய்து முடிந்து வெளி வருகின்றன. கூடிய சீக்கிரம் ஐந்தும் வெளிவரும் என நம்புகின்றனர். இவ் வபார சக்தியின் முன், அச்சுநாடு ஒன்றும் செய்ய இயலாது என்பது திண்ணம்.

டாங்குகள், ஆகாய விமானங்கள் முதலியவைகளை ஓட்டுவதற்குப் பெட்ரோல் மிகவும் முக்கியமானது. இப் பெட்ரோல் நேசநாட்டினரிடமே ஏராளமாகச் சிக்கிக் கிடக்கின்றது.' உலகப் பெட்ரோல் உற்பத்தியில், நூற்றுக்கு 62 பத விகிதம் அமெரிக்காவில் மாத்திரம் கிடைக்கின்றது. அன்றியும், ரஷ்யா, பெர்ஷியா, இராக், சிரியா முதலிய நாடுகளிலும், ஏராளமான பெட்ரோல் நேச நாட்டிற்குக் கிடைத்து வருகின்றது. காகஸிலிருந்து ஜெர்மனியர்கள் விரட்டப் படுவார்களேயானல், ருமேனியாவில் கிடைக்கும் இரண்டு சத விகிதமுள்ள மட்டரகமான பெட்ரோலையும், மற்ற இடங்களில் கிடைக்கும், 13 சத விகிதமுள்ள பெட்ரோலையும் கொண்டுதான், ஹிட்லர் திருப்தி யடையவேண்டியிருக்கிறது.. இவ் வெண்ணெய்ப் பஞ்சத்தை இப்போதே அவர் உணர ஆரம்பித்து விட்டார். சமீபத்தில் ஜெர்மன் ராணுவத் தலைமைக் காரியாலயம், பெட்ரோலில் ஓடிக்கொண்டிருந்த வண்டிகளெல்லாம், கரியில் 'ஓடவேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிறது. ஹிட்லரின் மீளா விழ்ச்சிக்கு இதுவே காரணமா யிருக்கலாம். ஹிட்லர் இன்று நேசநாட்டின் உற்பத்தியைக் கண்டு பயப்படுவதுடன், தன் பலம், நாளுக்கு நாள் குறைந்து வருவதையுங் கண்டு நடுங்குகிறார். ரஷ்யாவில் இழந்த பயங்கரமான பெருத்த நஷ்டமும், இவர் ஆதிக்கத்துக் குட்பட்ட நாடுகளின் தொழிற்சாலைகளிலும், போக்கு வரத்து சாதனங்களிலும் ஏற்படும் தொல்லைகளும் ஹிட்லரின் பலத்தைப் பெரும்பாலும் குறைத்துக்கொண்டு வருகின்றன. இன்னும் ஆங்கில விமானிகள் குறிப்பிடத்தக்க எதிரியின் முக்கிய தொழிற்சாலைகளைக் குண்டு

வீச்சினால் அழித்தும் வருகின்றனர். நேசநாட்டின் பலம் பெருகுவதற்கு ஆங்காங்கே போரை வெகு திறமையுடன் நடத்தும் தளபதிகளே முதற்காரணம். ரஷ்ய தேசத்துத் தளபதிகளாகிற டிமோஷெங்கோ, ஜூகோ முதலியவர்களின் வீரமும், போர் முறையும் ராணுவ தந்திரமும் பாராட்டற்குரியன. மேலும் சிறந்த ஜெனரல்களாகிற டிகாலும், கிராடும், நேசதேசங்களுக்காக உழைத்து வருகின்றனர். ரஷ்யாவிலும் வட ஆப்பிரிக்காவிலும், பலம் பெருகி வருவதே இவர்களின் பிற்காலத் தோல்விக்கு முதல் அறிகுறியாம். ஜெர்மனியின் பலம் யுத்த தளவாடங்களிலும், போர் வீரர்களிலும் குறைவுபட்டு வருவதால் ஹிட்லரால் புதுப்பட்டாளம் அமைப்பது மிகவும் கடினம். ஆகவே, தான் பிடித்த ஐரோப்பிய நாடுகளின் காபந்துக்காக வைக்கப்பட்டிருக்கும் பட்டாளத்தைதான் ரஷ்ய ஆப்ரிக்க போர் முனைகளுக்கு அனுப்ப வேண்டிவரும். இத் தருணத்திலே இங்கிலாந்து ஜெர்மனியால் ஆக்ரமிக்கப்பட்ட ஐரோப்பிய நாடுகளில் இறங்க ஏற்பாடு செய்யலாம். இவ்வாறு பல போர்முனைகள் ஏற்பட்டால், ஜெர்மனியின் பலம் எங்கும் குறைந்து நேசநாட்டின் வெற்றி முரசு எங்கும் ஒலிக்க ஆரம்பிக்கும். இன்னும் சில மாதங்களிலேயே ஐரோப்பாவை முன்னேறித் தாக்கி நேச நாட்டினர் வெற்றி பெறுவது நிச்சயம். "1944-ல் நேச தேசங்களுக்கு வெற்றி கிடைக்கும். அவ் வருஷம் நாம் ஜெர்மனிக்குள் புகுந்து அதைத் தாக்குவோம். ஹிட்லர், ரஷ்யா மீது படை யெடுத்தபோதே அவருக்கு முடிவுநாள் எட்டிவிட்டது. இது ஜெர்மன் ராணுவ அதிகாரிகளுக்கும் நன்கு தெரியும். ஜெர்மனியில் பிளவு ஏதும் இராது. ஹிட்லரிட மிருந்து ராணுவத் தலைவர்கள், அதிகாரத்தைப் பறிப்பர். ஆனால் முடிவு தெரியும் வரை யுத்தம் நடக்கும். பெர்லினில் நேசதேசங்கள் சமாதான நிபந்தனைகளை விதிப்பார்கள்" என நமது சுதந்திர பிரான்சு தளபதி கிராட் முன்கூட்டி அறிவித்திருக்கிறார். தற்போது நேச நாடுகள் ஐரோப்பாவில் யுத்தத்தைக் கவனித்து வருவதால் கீழ் நாட்டில் ஜப்பானின் கொட்டம் அதிகரித்து விட்டது. அங்கு யுத்தம் முடிவடைந்தவுடன் நேசநாடுகள் ஜப்பானை அடக்கி வெற்றிக்கொடி நாட்டும் என்பது திண்ணம். இச் செயபேரிகை கொட்டும் நந்நாளை நாம் வெகு அண்மையில் எதிர்பார்ப்போமாக.



# தலைவன் படும்பாடு

(ஏ. எம். ரஷீத்.)

கவிகளின் போக்கு மிகவும் விசித்திரமானது. அவர்களுடைய கையில் காதல் சிக்குண்டால் கேட்கவே வேண்டியதில்லை. கவிகள் காதலைப் பார்க்கும் கோணம், காதலின் தோற்றம் பல மாறுதல்களை யுடையது என்பதை அறிவுறுத்துகின்றது.

ஒரு மாலை ஒரு நங்கை ஒரு நம்பியைக் கண்டாள். கண்டதும் காதல். அவள் மனம் எப்படி தவித்தது !

பிறையெனு நுதலவள் பெண்மை யெனப்படும்
நறைகமழ் அலங்கலான் நயன கோசரம்
மறைதலும் மனமெனும் மத்த யானையின்
நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதே !

மனமானது கட்டுக்கடங்காமல் விரைந்து தலைவருடன் ஓடுகிறது என்கிறார் கவி.

"என்னுடைய தலைவர் என் நெஞ்சில் இருக்கிறார்; அதனால் நான் சூடான சாப்பாட்டை உண்ணமாட்டேன் !" என்கிறாள் காதலி. காதலின் சேஷ்டைகளுக்கும், காதலர்களும் படும் கஷ்டங்களுக்கும் விசித்திரம் என்ற வரம்பும் இருக்கின்றதா, என்ன?

நெஞ்சத்தார் காதலவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து.

இப்படி இருக்க தலைவனை நேரில் பார்க்கும்பொழுது மாத்திரம் என்ன வெட்கம் ?

யானோக்குங் காலை நிலனோக்கு(ம்) நோக்காக்காற்
தானோக்கி மெல்ல நகும்.

"நான் பார்க்கும்பொழுது எதிர்பாராமல் நாணித் தலை குனிந்து நிலத்தைப் பார்க்கிறாள். அதை அறிந்து நான் பாராத பொழுது அவள் என்னைப் பார்த்துப் புன்முறுவல் செய்கின்றாள்" என்று காதலன் அமுதமும் விஷமும் தோய்ந்த குரலில் முறையிட்டு மகிழ்கின்றான்.

சில நாட்கள் காதல் பிரவாகமாக ஓடி, பிறகு கல்யாணமும் ஆகிவிடுகின்றது. அப்பொழுது காதலி இவருக்காக நாம் உயிரைக் கூட விடத் தயாராக இருந்தோமே என்று நினைக்கின்றாளா? இரவு பகலாக ஓய்வு ஒழிவின்றி எழுதிவந்த காதற் கடிதங்களைத்

தான் நினைத்துக்கொள்ளுகின்றுளா? காதலன் வரவை எதிர் பார்த்து தென்றலையும் நிலவையும் தூற்றிவந்த இரவின் எண்ணிக்கையைத் தான் கருதுகின்றுளா? அதெல்லாம் ஒன்றும் கிடையாது. இப்பொழுது தலைவன் காதலனல்லன்; கணவனுகி விட்டான். அவன் இப்பொழுது அவளுடைய நிரந்தரமான ஒப்புயர்வற்ற சொத்து. அவனை வருத்தி, ஊடல் புரிவதில் அவளுக்கு எல்லையற்ற இன்பம் ஏற்படுகின்றது. அவனை எப்படியெலாம் துன்புறுத்தலாமென யோசிக்கின்றுள்.

இம்மை பிறப்பிற் பிரியல னென்றேனுக்
கண்ணிறை நீர் கொண்டனள்.

காதல் மிகுதியால் தலைவன், "இப்பிறப்பில் உனை யான் மறவேன்" என்று சொன்னதை, மறு பிறப்பில் பிரிவேன் என்று சொல்வதாக அர்த்தம் செய்துகொண்டு அழ ஆரம்பிக்கின்றுள்.

வழுத்தினுள் தும்மினேனுக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினி ரென்று.

"நாங்க ளிருவரும் கூடி யிருக்குங்காலை நான் தும்மினேன். சந்தோஷமாக இருந்த என் மனைவி, 'யார் நினைத்து நீங்கள் தும்மினீர்கள்?' என்று அழுகின்றுள்" என்று முறையிடுகின்றுன் தலைவன்.

தும்முச் செறுப்ப வழுதாள் நுமதுள்ளல்
எம்மை மறந்திரோ வென்று.

"இப்படி அழுகின்றுளே என்று வந்த தும்மலை அடக்கினேன்! 'உங்களுக்குத் தும்மல் வர காரணமிருப்பதாலேயே என்னிடம் மறைக்கிறீர்!' என்கிறுள்"

தினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

"என் சொற்களுக்கும் செயல்களுக்கும் கோபிக்கிறுளென்று சும்மா அவளைப் பார்த்துக்கொண்டே இருந்தேன். 'யாருடன் என்னை ஒத்துப் பார்க்கிறீர்கள்?' என்று கோபிக்கின்றுள்."

ஆனல் கணவன் எங்கும் சென்று, பிரிந்து, பிறகு திரும்ப வந்தால்,

காணுங்காற் காணேன் தவருய, காணுக்காற்
காணேன் தவறல்லவை.

"என் கணவனைக் காணும்பொழுது அவர் குற்றங்கள் எனக்குத் தெரியவில்லை" என்கிறுள் தலைவி.

எல்லாம் நாயனுர் கூற்று.

# வார்தா நினைவுகள்

'("சமூகத்தொண்டன்.")



## தீண்டாமை பழங்கதை

இங்கே வேலை செய்யும் தொழிலாளிகள் எல்லோரும் ஹரிஜனங்கள். தொழிற் பயிற்சிக்கு வருவோரெல்லாம் ஹரிஜன இளைஞர்கள் என்பதை யறிந்துள்ளேன். ஆனால், தொழிற்சாலையின் காரியாலயத்தில் வேலை செய்வோரில் பெரும்பாலோர் பிராமணர்கள். இவர்களில் சிலர், உயர்தர கல்விப்பட்டம் பெற்றவர்களாயும் உள்ளனர். இவர்களுக்கெல்லாம் ஓர் சாப்பாட்டு விடுதியும் உண்டு. அதில் பிராமணர்கள், ஹரிஜனங்கள் என்னும் வேற்றுமையே மாண்டொழிந்து விட்டது. அவ்வுணவு விடுதியில் சமையல் செய்பவர் ஓர் ஹரிஜன மங்கை என்பதைக் குறிப்பிட வேண்டும். அம்மங்கை சமைத்து வைத்துச் செல்வதை மற்ற பிராமண, பிராமணர் அல்லாதாரும் ஹரிஜனங்களும் ஒருவர்க்கொருவர் பரிமாறிக் கொண்டு உண்கின்றனர்! என்ன அரிய மாறுதல்!: எவ்வளவு அற்புதம்!

பத்தாண்டுகட்கு முன்னர் கனவிலும் காணாத வொன்றை, இன்று கண்கூடாகக் காணும் பேறு வாய்த்துளது. திருக்குலத்தாராகிய ஹரிஜனங்கள் கடவுள் படைப்பில் ஒரு பகுதி யென்பதை எல்லோரும் ஒப்புகின்றார்கள். அப்படிப்பட்ட ஒரு படைப்பை ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக தீண்டாதார் என ஒதுக்கித் துன்புறுத்திய பாதகம் இந் நாட்டை விட்டு இனித் தொலைந்தாக வேண்டியதே. தாங்கள் உயர்குலத்தார் என்று செருக்கிப் பிதற்றுகின்ற வைதீகக் குடுக்கைகளும், தங்கள் மடமைக்குக் கழுவாய் செய்து கொள்ளவேண்டும். அவர்களுக்குக் கழுவாயாவது ஹரிஜன மக்கள் முன்னேற்றத்திற்கு தங்கள் உடல்-பொருள் ஆவியெல்லாம் ஒப்படைத்து உழைப்பதாகும். இனி நால்வாடிக்கு "நமஸ்தே" கூறிக் கொண்டு மகன்வாடி செல்வோம்.

## ஒரு தமிழ் நண்பர்

நான் நால்வாடி ஆசிரமம் சேர்ந்த சில நாட்களிலேயே மகன்வாடியைப்பற்றிக் கேள்விப்பட்டேன். ஆனால், சென்று காணவில்லை. மகன்வாடி வார்தாவின் ஒரு பகுதி. அங்கே அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் நிறுவப்பட்டுள்ளது. யான் ஒருநாள் அதைக் காணச் சென்றேன். மகன்வாடி சென்னை தியாகராஜ நகர் போன்ற நகரம். எம்மருங்கும் அழகிய தோட்டங்களும், மாளிகைகளுமாயிருக்கிறது. யான் ஒரு முக்கியப் பாதை வழியாகச் சென்று கொண்டிருந்தபோது, ஒருவர் எதிரில் வந்து கொண்டிருந்தார். நான் அவரை, "ஐயா, இங்கே அகில இந்திய கிராமக் கைத்தொழிற்சங்கம் உளதாமே. அதில் சென்னை மாகாணத்தவரும் வந்துள்ளார்களாம். அந்தவிடம் எங்கே?" என்று கேட்டேன். என்னுடைய நீண்ட கேள்விக்கு "வாருங்கள்" என்ற ஓரே வார்த்தையில் பதிலிறுத்தி நடந்தார் அவர். எனக்கு இன்னபடி யென்று விளக்க முடியாத மகிழ்ச்சி. "கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது" போல் யான் பார்க்க விரும்பியவரே எதிரே வந்துவிட்டாரல்லவா? யானும் மௌனமாய்ப் பின் தொடர்ந்தேன்: அவர் சிறிது தூரம் அந்தப் பாதை வழியே நடந்து அங்கிருந்த ஒரு வாயிலில் நுழைந்து தோட்டத்தை யெல்லாம் நடந்து ஒரு கட்

டிடத்திற்குள் நுழைந்தார். அங்கு பல அறைகள் வரிசையா யிருந்தன. அவைகளில் ஒன்றில் நமது நண்பர் நுழைந்தார். யானும் அவ்வறையிற் சென்றேன். யான் கண்ட காட்சியை என்னென்பேன்!

அவ் வறையில் இருந்த நால்வரும் ஒவ்வொரு இராட்டையின் முன் அமர்ந்து நூற்றுக் கொண்டிருந்தனர். அந்த நான்கு ஜோடிக் கண்களும் என்னை ஆவலுடன் நோக்கின. என்னை யழைத்துப்போன நண்பர் இப் போதும் சுருக்கமான மொழியில், "இவர் ஒரு தமிழர்: வழியிற் சந்தித்து, நமது அறைக்கு அழைத்து வந்தேன்" என்று அவர்கட்கு அறிமுகப் படுத்தினார். நால்வரும் என்னை அன்புடன் வரவேற்றனர். எல்லோரும் மகிழ்ச்சியாய் அளவளாவினோம். மூன்று வாரங்களாய்த் தமிழ்முகம் காணாத எனக்கு, தமிழ் நண்பர்களைக் கண்டவுடன் நெடுநாட்களாய்ப் பிரிந்திருந்த சுற்றத்தாரைக் கண்டதுபோல் இருந்தது.

நமது நாட்டில் நாம் நாள்தோறும் எத்தனையோ தமிழர்களைக் காண்கின்றோம்: பேசுகிறோம். ஆனால், எவ்விதப் புத்துணர்ச்சியும் காண்கின்றோமில்லை. ஆயினும் தாய்நாட்டிற்குப் பலநூறு கல் தொலைவில் சென்ற பின் அங்கு, எவராவது ஒரு முன் பின்னறியாத தமிழரைக் காண நேர்ந்தால் அவர்களைச் சுற்றமாயும், உயிர்க்குயிராயும் ஏற்றுக் குலவுகிறோம்! என்னே! தாய்நாட்டின் பால் உள்ள மடையும் தனிப்பெருமை! ஆகவே யன்றோ தாய் நாட்டினின்று நாடு கடத்தப்பட்ட மாபெருந் தலைவர், லாலா: லஜபதிராய், "எத்தனைநாள் என்னை இருட் சிறையில் இட்டாலும், தத்துபுனல் பாஞ்சாலந்தன்னில் வைத்தால் இன்புறுவேன்" என்னும் பொருள் பட அமெரிக்க நாட்டிற் கிடந்து அல்லும் பகலும் அலமந்தார். எவ்வளவு ஆற்றுமை! தாய் நாட்டின்பால் அவருக்கிருந்த அன்பின் துடிப்புத்தான் என்ன? இவ்விதம் தாய் நாட்டிலிருந்து தொலை தூரம் சென்றிருப்பவர்கள் படும்பாடு உணர்ந்தவர்க்கே தெரியும்.

அன்றிரவு என்னை வித்தியாலய விடுதியிலேயே தம்முடன் தங்கியிருக்கும்படி வேண்டினர். அது கேட்ட நான், எனது கொடுங்கோன்மை நிறைந்த திண்ணைப் பள்ளிக்கூட வாழ்க்கையை நினைந்து கொண்டேன். அந் நாட்களில் என்றாவது என் தாய், "இன்று பள்ளிக்குப் போகவேண்டாம்: வீட்டிலிருந்து காரியம் பார்" என்று சொன்னால், "ஆ! இன்று பள்ளிக்கூடம் போய்ப் படி யடி வாங்காமல் தப்பிப் பிழைத்தோம்" என்று துள்ளி விளையாடுவதுண்டு. அதுபோன்று, அன்று, அவர்கள் சொன்ன போது, "குதூகலமாகத் தமிழில் பேசி இரவை யெல்லாம் மகிழ்ச்சியாய்க் கழிக்கலாம்" என்று எண்ணி உள்ளம் பூரித்தேன். அவ்வாறே அன்றிரவு தமிழ் நண்பர்களுடன் அளவளாவி, அடுத்தநாள் காலை ஆசிரமம் வந்து சேர்ந்தேன்.

அந்நாள் தொட்டு ஒவ்வொரு ஞாயிறு விடுமுறையிலும் மகன்வாடி சென்று உல்லாசமாகப் பொழுதுபோக்கி வருவது வழக்கமாய்விட்டது. அன்று, முதல் முதலாய் என்னைப் பாதையில் சந்தித்து அழைத்துப்போன நண்பர்தாம், நான் மகன்வாடி போகுந்தோறும் என்னை உண்பித்து உபசரிப்பதில் தனியான அக்கரை காட்டிவந்தார். அவர் நாட்டிற்காகத் தொண்டாற்றி இருமுறை சிறை சென்றவர். இன்னமும் தாய் நாட்டின் தொண்டிலேயே பற்றுக்கொண்டு உழைத்துவருகின்றார். அவர், இன்னாரெனக் குறியாது மேலே செல்வது முடியாமையாகின்றது.

அவர் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்தவர். அவர் பேர் எ. கிருஷ்ணன் என்பது. அவர் பல ஆண்டுகளாக திருச்செங்கோடு "காந்தி ஆசிர

மத்தி விருந்து பணியாற்றி வருகிறார். அவர், வார்தாவிலிருந்த பத்து தினங்களில், வார்தாவுக்கு வந்த எல்லாத் தமிழர்களையும் தமது விருந்தினராக வரவேற்று உபசரிப்பதில் ஓர் தனியான உரிமையும், இன்பமும் உடையவர், தமிழ்க்குலத்தா ரன்றோ? தமிழ் வேள்வியாகிய விருந்தோம்பலையே தமது குறிக்கோளாகக் கொண்டு ஒழுகிறார் போலும்!

இன்னொரு தமிழ் நண்பர் திரு. குப்புசாமி என்பவர், இவர் சிதம்பரத்தை யடுத்த விளாகம் என்னும் ஊருடையார். இளைஞரா யிருந்தாலும் ஊக்கத்துடன் பணி செய்யும் இயல்பினர். இப்போது அகில இந்திய நூற்போர் சங்கக் கிளையாகிய திருப்பூர் காரியாலயத்தில் இருக்கிறார்.

மற்றொருவர் திரு. குப்புசாமி நாயுடு ஆகும். இவர் இலங்கையில் ஒரு வர்த்தகர். ஆண்டுதோறும் பணச் செலவு பாராமல் அகில இந்திய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு வரும் வழக்கமா யிருந்தவர். நல்ல வாக்கு வன்மையுடன் மேடையிற் பேசுபவர். இப்போது வேலூரிலுள்ள "விவேகானந்த ஆசிரமத்"தில் இருந்து தொண்டாற்றுகிறார்.

வேறொருவர் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த ஆரம்பப்பள்ளி ஆசிரியர். தமது பள்ளியில் இராட்டைப்பயிற்சியைத் தொடங்கி நன்கு நடத்தி வருபவர். இப்போது தென்காசிக்கு 3 கல் தொலைவிலுள்ள தமது ஊரில் பள்ளிக்கூடம் நடாத்துகிறார்.

மேலே கூறியவாறு வாரந்தோறும் மகன்வாடி சென்று வரவே, அங்குள்ள தொழில்களில் மனம் சென்றது. ஆகவே, அவைகளைப்பற்றி யறிய வேண்டுமென்று தீர்மானித்தேன். நால்வாடி ஆசிரமத்திலிருந்து கொண்டே மகன்வாடியில் சேர வேண்டியதற்கான எல்லா முன்னேற்பாடுகளையும் செய்து விட்டேன். அதன்பின் 1940-ஆம் ஆண்டு ஜனவரி 2-ஆம் தேதி ஆசிரமத்தை விட்டு மகன்வாடியை அடைந்தேன்.

யான் மகன் வாடியிலுள்ள அகிலஇந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் வேலையை விளக்கு முன் மகன்வாடியின் வரலாற்றையும், அமைப்பையும் சிறிது விளக்குவது அவசியமாகும்.

## மகன்வாடி வரலாறு

காந்தியடிகள் பல காரணங்களை முன்னிட்டுச் சபர்மதியிலிருந்து இடம் மாற்ற வேண்டிய தாயிற்று. அக் காரணங்களில் கூர்ஜரம், சிந்து ஆகிய இரு மாகாணங்களைத் தவிர, ஏனைய மாகாணத்தார் தம்மை வந்து பார்ப்பதிலுள்ள பாட்டைக் காந்தியடிகள் உணர்ந்தது முக்கியமாய் உணர்ந்திருந்தது ஒன்று. இந்த மாற்றும் பிரச்சினை யெழுந்தபோது உப்பு சத்தியாக்ரஹமும் தொடங்கப்பட்டது. எனவே, அரசினர் கொடுமைக்கும் ஆளாகிச் சிறை சென்றார் அடிகள். அரசினர் தடையால் தாம் நடத்தி வந்த அந்த இரு செல்வாக்குள்ள வார வெளியீடுகளான "நவஜீவனும்" "யங் இந்தியாவும்" அடிகளால் நிறுததப்பட்டு விட்டன. இவ்வாறெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நடந்து விட்டபின், எல்லா மாகாணத்தாரும் எளிதில் கூடி காங்கிரஸ் இயக்கத்திற்கான திட்டங்களை அவ்வப்போது சிந்திக்க மத்திய மாகாணத்திலுள்ள வார்தாவைத் தேர்ந்தெடுத்தார் அடிகள். வார்தாவில்தான் காரியக்கமிட்டியின் உறுப்பினரும், பெருநிலக் கிழவருமான திரு. ஜம்னலால் பஜாஜ் வாழ்ந்து வந்ததும் அடிகள் உள்ளக் குறிப்பறிந்த திரு. பஜாஜ் தம் மூருக்கே வரும்படி அடிகளை வேண்டினார்.

(தொடரும்.)

# காலையும் மாலையும்

(வித்வான்—ந. வெங்கடராமன்.)

பொழுது புலரும் பொழுது கடற்கரைக் கருகில் விளங்குகின்ற அப் பெரிய நகரம் உறக்கத்திலிருந்து விழித்தும், விழிக்காததுமா யுள்ளது. கீழ்த்திசையில் **கதிரவன்** தன் வருகையை உலகத்தாருக்கு அறிவிப்பான் வேண்டித் தன் செவ்விய கிரணங்களை முன் கூட்டியே அனுப்புகின்றான். வானம் ஒரு சிறு பகுதியை மாத்திரம் செம்மையாக்கிக் கொண்டுள்ளது. அக் காலத்திலே அந் நகரத்தின் தோற்றத்தை அனுபவிக்குந் திறனை வாக்கினால் தெளிவுறுத்துதலைவிட நேரில் காண்பதே நேர்மையான தெனச் சொல்லவேண்டும். அந் நகரம் சுறு சுறுப்புள்ள நகரந்தான். ஆங்கு ஆலைகளும், கோயில்களும், மாளிகைகளும், கோபுரங்களும் வானளாவித்தான் நிற்கின்றன. ஆயின் அவைகளிடத்தே பிறக்கும் பெருத்த ஓசை புறப்பட இன்னும் கொஞ்ச நேரம் செல்லும். **செங்கதிரோன்** தன் முழுமதியையும் ஆங்கு காட்டினவுடனே அவனை வரவேற்பவரேபோல் நகரமாந்தர் பேரிகையினும் சீரிய ஓசையைக் கிளப்புவர். மேலும் மேலும் ஒளி மிக்குவரும் வானமும் புகை முதலிய கழிவுகளால் சூழப்படும் காலமும் அதுவே.

அக் காலை அந்நகரின் அருமைத் தோற்றத்தை, **ஆதவனின்** றியே அமைந்த அமைப்பினை ஆவலுற்று அதிசயிக்காதா ரிலரென்றே சொல்லவேண்டும். காலை யழகு, சோலைகள் நிரம்பிய அவ்விடத்தில் அழகுறத் தொடுக்கப்பட்ட மாலைபோல் விளங்குகிறது. கடலின் பேரிரைச்சலைத் தவிர எங்கும் ஓசையின்மையே நிலவுகின்றது.

கடலினை யடுத்து நிற்கும் அக்குன்று கடலினை அதற்குமேல் செல்ல வொட்டாது தடுக்கிறது. முயன்று முயன்று அலையும் கடல் அக் குன்றின் மீது மோதுவதால் உண்டாகும் வெண்மையான நுரை வெண்குருதி யெனத் தோற்றுகிறது. மெல்ல மெல்ல **ஆதவன்** வெளிப்படுகிறான். புயலினால் ஒரு சிறிதும் அசைக்கப்படாது ஆனந்தமாய் ஓடிக் கொண்டிருக்கும் அவ் வாற்றங்கரையிலே மக்கள் குழுமி யுள்ளனர். பின் **பகலவனும்** தன் பகற் பிரயாணத்தை நீடித்து நடத்த ஆரம்பிக்கிறான்.

**மாலைவேளை.** ஆலைகளிலும் வேற்றிடங்களிலும் உண்டான பெருமோசை நின்று விட்டது. **சூரியனும்** மேற்றிசைக்குச் சென்று விட்டான். காலை போலவே மாலையும் விளங்க ஆரம்பிக்கின்றது. சேய்மையிலுள்ள அடிவானம் கடலொடு கலந்து விட்டது. அக் காட்சி, வானம், கடலின் மீது அமர்ந்து அடைகாப்பதுபோ லுள்ளது. எங்கும் ஓசையின்மை நிலவினபோதிலும் கடலானது தன் கடமையைச் செய்துகொண்டுதா னுள்ளது.

மாலைக் கதிரவனின் கிரணங்கள் மக்களின்மேல் தவழ்ந்து விளையாடுகின்றன. தம் காதலராகிய கிரணங்கள் அந் நகரிலிலங்கும் சோலைகளிலும் பிறவற்றிலும் விளையாடுவதைக் காதலிகளாகிய தென்றற்காற்றுகள் தென்வானிலே கம்பீரமாக விளங்கும் உப்பரிகைகளி லுள்ளவாறே கண்ணுறுகின்றன. அதற்குமேல் அவைகளால் அங்கே இருக்க முடியவில்லை போலும். குளிர்ச்சியும் புன்முறுவலும் ததும்பிய மதியினவாய் அவையும் தங்காதலரிடம் வந்தடைகின்றன. மனத்துக்கும் உடலுக்கும் ஒருங்கே உவகையளிக்கும் தென்றற் காற்றும் மாலை வெயிலும் அள்ளித் தரும் ஆனந்தம்தான் என்னே !

நிலை முழு மதியோன் மறையுங்கால் வானம் பல நிறமுடையதாகின்றது. ஒருபால் நீலமும் ஒருபால் சிகப்பும் ஒருபால் வறுமையும் ஒருபால் வெண்மையும் ஆக அது பல நிறங்கொண்ட திறனுடைய வைரங்களைப்போல், பாகுபட்டுப் பிரகாசிக்கும் நேர்த்தி சொல்லுந்தரமன்று.

பின் அவன் ஆழ அமிழ்கிறான். காலையும் மாலையும் அனைத்தையும் பொலிவுறச் செய்து பேருவகை யளிக்கும் இன்றியமையாத அவ்வாதித்தனை (உயிர் வாழ்க்கைக்கு உற்ற பொருள் சில அவனிடமிருந்தே மாந்தரும் பிறவும் பெறவேண்டி யிருத்தலான் அவன் இன்றி யமையாதவனாயின னென்க.) மறுநாட் காலையில் தான் கண்கள் காணும் பேற்றினை அடைகின்றன.

[இது ‘William Wordsworth’ ன் ‘Sonnets’ ஐத் தழுவியது.]

---

# காந்தி வெண்பா

1. சத்தியவா ளாயுதமும் சாந்தமெனும் கேடயமும்
உத்தகளத் தும்பகைவர்க் குற்றவனும்—வித்தகஞ்சேர்
காந்திமகான் காட்டும் கருணைவழி யொன்றே யாம்
மாந்தருயிர் காக்கும் மருந்து.

2. அன்பால் உலகினரை ஆண்மைமிகுஞ் சாத்வீகப்
பொன்பா தையிற்செலுத்தும் புண்ணியவான்—என்பாலும்
பிறர்க்குரியன் எங்கள் பிரான் காந்தி காட்டும்
அறத்தாறே மேன்மையது வாம்.

3. காந்திக் கதிர்பரப்பிக் காசினியெல்லாம் விளங்கச்
சாந்த நெறிகாட்டும் தண்ணளியன்—மாந்தர்
துயர் நீக்கவந்த தூயன் அறவழியே
உயர் வளிக்கும் மக்கள் உயிர்க்கு.

4. பிறர்பாற் பிழைகாணின் பெம்மானெங் காந்தி
அறத்தா லவர் குறைநீங் கற்கு—திறத்தால்
உண்ணு நோன் பாற்றி உயிர் விடவுஞ் செய்வானே
எண்ணுனே தீங்கு பிறர்க்கு.

—உ. பீ. உசேன்மீர்

# இனியர் யாவர்?

(கா. கணபதி)

ஏனாதி திருக்கிள்ளி யென்னு மரசன் மாற்றாருடன் கடும் போர் செய்து அவர் படைகளைச் சின்னாப் பின்னப் படுத்தி தோல்வி யடையச் செய்தான். சரீரம் முழுவதும் வடுக்களாலான ஆபரணங்களை யணிந்து வருகிறான். வீதியிற் கண்டவர்கள் பூமாரி பொழிகின்றனர். கோயில்களில் மணிநாதங்களும் மற்றும் இனிய கீதங்களும் முழங்குகின்றன. ஜனங்கள் உரத்த குரலில், 'எம் அரசன் இனிது வாழ்க, ஏனாதி திருக்கிள்ளி எழிலோடு இசைபெற்று இந்நிலத்தி லோங்குக' என்று ஜய கோஷம் செய்தனர்.

மறுநாள் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமனார் என்னும் சிறந்த தமிழ்ப்புலவர் அரச சபையை யணுகி அரசனை நோக்கி 'விஜயீபவ' என வாழ்த்தி வணங்கினார். அரசனும் எதிர் வணக்கம் செய்தான்.

புலவர் பெருந்தகை தம் உள்ளத்தே ஓர் வரையறை செய்து கொண்டு அரசனைப் புகழ்ந்து அதனூடே ஒரு கேள்வியையும் கேட்கின்றார்.

"போரில் வெல்லக்கூடிய வீரக்கழலை யணிந்த அழகிய பாதமும் வேகமாகச் செல்லக்கூடியதுமான குதிரையையுடைய கிள்ளி வளவனே! நீதான், போரைக் கண்டால் அப்போரில் வென்று அவர் படைகளை விலக்கிக் கம்பீரமாக எதிர்த்து நிற்பதால் வாளினாற் சிதைவுண்ட வடுக்களால் சிறம்பப்பெற்ற சரீரத்தோடு செவியினாற் கேட்பதற்கு இனிமையா யிருக்கின்றனை. கண்ணாற் பார்ப்பதற்கோ வடுக்களால் சிதைவுண்ட தேகமானதால் துன்பத்தைத் தருபவனாய் இருக்கின்றாய். நின்னைக் கண்ட பகைவர்களோ உன்னைக் கண்ட மாத்திரத்தில் உன் வீரச்செயலுக்கு அஞ்சிப் புறமுதுகு கொண்டு ஓடுவதனால் அவர்கள் சரீரத்தில் வடுக்கள் காணப்பெறாமல் கண்ணாற் காண்பதற்கு மிக்க இனிமையுடையவராய் இருக்கின்றனர். ஆனால், கேட்கும் செவிக்கோ துன்பத்தைத் தருபவராகின்றனர். அதனால் நீயும் ஒரு விதத்தில் இனிமையுடையவனா யிருக்கின்றனை. நின் பகைவர்களும் ஒரு விதத்தில் இனிமையுடையவரா யிருக்கின்றனர். பொருந்ாதன என்ன இருக்கிறது? அதன் காரணம் யாதோ பெருமானே! எனக்கு உரைப்பாயாக" என்றார்.

அவர் பாடியது புறநானூற்றில் 167வது செய்யுளாகத் திகழ்கின்றது. அது கீழ்வருமாறு:—

"நீயே, அமர் காணின் அமர் கடந்தவர்
படை விலக்கி யெதிர் நிற்றலின்

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப்-சு. மீ. கணபதி)



## இரண்டாவது அத்தியாயம்

### உள்ளத்தின் குமுறல்

நித்திரை, மனிதனுக்கு இவ்வுலகில் சுவர்க்கம் போன்றது. ஆனந்த உலகில் சஞ்சரிக்க அது பெரிதும் உதவி செய்கிறது. கவலைகளெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோலாகச் செய்து விடுகிறது. எண்ணங்களற்று, நிஷ்டை நிலையை உண்டாக்குகிறது. பகலெல்லாம் உழைத்துச் சலித்து வருபவர்களுக்கு ஆனந்தம் உண்டாக்கி, அவர்களை இளைப்பாறும் படியும், உடல் நலிவு தோன்றாமலுமிருக்கச் செயகிறது. நித்திரையினால் உண்டாகும் சுகம் மற்று எதனாலும் உண்டாக மாட்டாது.

காலை மணி எட்டாகியும் வாசு எழுந்திருக்கவில்லை. அவனாக எழுந்து விடுவான் என எதிர்பார்த்திருந்தால் அதிக நேரமாகி விடும் என எண்ணி, சோமு, அவனை எழுப்புவதற்கு அவன் படுத்திருந்த அறைக்குள் சென்றான். சந்திராவும் கூடவே சென்றாள். பெயர் சொல்லி அழைத்துப் பார்த்தான் சோமு. பிரயோசனப் படவில்லை. கட்டிலை அசைத்தான். வாசு திரும்பிப் படுத்துக் கொண்டானே தவிர பேசவில்லை. பலமாக அசைத்தார்கள். "யாரும் தொந்திரவு செய்யாதீர்கள். இந்த அதிகாலையில் எனக்கு வேலையில்லை" என்று சொல்லிப் போர்வையை இழுத்துப் போர்த்துக் கொண்டான். மறுபடியும் சோமு கூப்பிட்டான். "என்னடா, காலை வேளையில் அவசரமா" என்று சொல்லிக்கொண்டே எழுந்து உட்கார்ந்தான் வாசு. அப்பொழுதும் அவன் தூக்கம் கலையவில்லை. இதைப் பார்த்து இருவரும் சிரித்தார்கள். இவர்கள் சிரிப்பின் ஒலி இவன் தூக்கத்தைக் கலைத்தது. அப்பொழுதுதான், தான் சோமுவின் வீட்டில் படுத்திருப்பது அவனுக்கு ஞாபகம் வந்தது.

"மணியை நிமிர்ந்து பார். காபி எப்பொழுது சாப்பிடுவது? உனக்காக நாங்களும் காத்துக் கொண்டிருக்கிறோம். சீக்கிரம் பல் துலக்கி வா. ஸ்நானம் அப்புறம் செய்து கொள்ளலாம்" என்று சோமு சொன்னதும், வாசு தந்த சுத்தி முதலியன செய்து அவர்களுடனேயே காலை ஆகாரம் உட்கொண்டான். சோமுவின் வற்புறுத்தலினால் அன்று அங்கு தங்கவும் ஒத்துக்கொண்டான்.

இன்னும் இரண்டு நாட்களுக்கு வாசுக்கு லீவ் பாக்கியிருந்தது. அவனுடன் பொழுது போக்குவதை விரும்பி, அவனுக்குத் தெரியாமல், சோமுவும் இரண்டு நாட்கள் லீவ் எழுதி விட்டான். சாப்பாடு முடிந்த பிறகு, "நீ ஆபிஸ் போய் வா. நான் மாலையில் வருகிறேன். இல்லாவிடில் என் அறைக்கு வந்து என்னுடன் இன்று இரவு தங்கி விடு" என்றான் வாசு. சோமு லீவு எழுதி விட்டதைப்பற்றிக் கூறினான். வாசுவை சிறிது படுத்து

ஒய்வு எடுத்துக் கொள்ளும்படியும் கூறினன். வாசு இதனை எதிர்பார்த்
தான். மாலை வரை நன்ருகத் தூங்கி எழுந்து இருவரும் கடற்கரைக்கு
வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது சோமு வாசுவின் கவலையின் கார
ணத்தை அறிய விரும்பினன்.

“ஆரம்பம் முதல் நான் கூறிக்கொண்டு வருகிறேன். உன்னிடம் நான்
சொல்லியிருக்கலாம். ஆயினும் முதலிலிருந்தே கேட்பது நலம்” எனக்
கூறி, வாசு தொடங்கினன். “என் தாய் இறக்கும்பொழுது எனக்கு வயது
பதினென்ரு. என் தங்கை கமலாவுக்கு வயது ஒன்பது. தாய் இறந்த
பின்பு என் தகப்பனர் மறுபடி விவாகம் செய்துகொள்ள, பலர் வற்புறுத்தி
யும் மறுத்து விட்டார். என்னையும், கமலாவையும் மிகுந்த அன்புடன்
நடத்தி, எங்களுக்கு படிக்கவும் வசதி செய்து கொடுத்தார். நான் காலே
ஜில் படித்துக் கொண்டிருந்தபொழுது கமலாவுக்கு விவாகம் செய்வித்த
னர். அப்பொழுது அவள் பத்தாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்
தாள். மாப்பிள்ளை அப்பொழுதுதான் எம். ஏ. பாஸ் செய்திருந்தார். வர
தக்ஷிணைக்குப் பதில், மாப்பிள்ளைக்கு ஐ. ஸி. எஸ். படிக்க ஆகும் செலவுக்
காக ரூ. 10 ஆயிரம் முதலில் பாங்கியில் போட்டு விட வேண்டுமென்று
பேசி, சுமார் மூவாயிரம் ரூபாயில் கல்யாணத்தை நடத்தி முடித்தார்கள்.
மாப்பிள்ளை இப்பொழுது சப் கலெக்டரா யிருப்பது உனக்குத் தெரியும்.
சாந்தி முகூர்த்தத்தின் பொழுது மாப்பிள்ளையின் அந்தஸ்துக் கேற்றுற்
போல் செய்ய வேண்டு மென்றதில், ரொக்க மிருந்ததுபோய், ரூ. 500
கடன் ஏற்பட்டது. அதை நான் வேலைக்கு வந்த மூன்று வருடங்களுக்குள்
தீர்த்தேன். என் தகப்பனருக்குப் பென்ஷன் முப்பது ரூபாய் வருவதை
தன் பெண்ணிடமே கொடுத்து அங்கேயே இருக்கிறர். என்போன்று
இந்த வயதில் அவரால் ஹோட்டலில் சாப்பிட முடியாது. ஆகவே அவ
ருக்கு அங்கு தவிர வேறு இடத்தில் இருப்பது முடியாது.

கமலாவுக்கு மணமாகும் வரை சதா அண்ணு, அண்ணு என்றே சுற்
றிக்கொண் டிருப்பாள். அதன் பின்பு சிறிது சிறிதாக என்னிடமிருந்து
ஒதுங்கி யிருந்தே வந்தாள். சுமார் மூன்று வருடங்களுக்கு முன்பு, அதா
வது என் கடனை அடைத்த பிறகு, அவளைப் பார்க்கப்போன பொழுது
சரியாக என்னிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. நானும் அதைப் பொருட்
படுத்த வில்லை. இப்பொழுது என் தகப்பனர் உடல் நலிவாயிருக்கிறர்
எனக் கடிதம் வந்துதான் போனேன். போன இடத்தில் தகப்பனர் மிகுந்த
சிரமத்துடன் எழுந்து உட்காரும் நிலைமையி லிருந்தார். ஐந்து ரூபாய்களுக்
குப் பழவகைகள் மட்டில் வாங்கிக் கொண்டுபோ யிருந்ததும் உனக்குத்
தெரியும். கமலா என்னைக் கண்டு தலையை ஆட்டிவிட்டு உள்ளே சென்று
விட்டாள். நான் சௌக்யமா என்று கேட்டதற்கும் பதிலில்லை. ஆனல்
அவள் தகப்பனர் இருந்த அறையை, சேவகனை விட்டு காண்பிக்கச் சொன்
னள். அங்கு போய் அவரை நிராதரவான நிலையில் பார்த்ததும் என்னை
அறியாமலே அழுதேன். மிகவும் கேவலமான நிலைமையிலிருந்தார். என்
னைப் பார்த்ததும் அவரும் பேச முடியாமல் அழுதார். நாங்கள் சந்தித்து
மூன்று வருடங்கள் ஆகிவிட்டன. ஆகவே, என் க்ஷேமலாபங்களைப் பற்றி
விசாரித்தார். தனக்குச் சரிவர கவனிப்பு இல்லை என்றும், அவரை என்
னுடன் அழைத்துச் செல்லும் படியும் மன்ருடினர். அந்த நிலையில் நான்
என்ன செய்யமுடியும்? வீட்டில் துணைக்கு ஆளில்லாத சமயம் எப்படி
நான் அவரை அழைத்து வரமுடியும்? தகுந்த சமாதானங்கள் சொல்லி
அவரைச் சம்மதிக்கச் செய்தேன். அவரும் நான் சொல்லியவை வாஸ்தவ
மென ஒப்பினர். சாப்பாட்டு நேரம் வரை இருவரும் அந்த அறையிலேயே

இருந்தோம். கமலா எட்டிப் பார்க்கவே இல்லை. வீட்டுச் சமையற்காரி,
என் தகப்பனுருக்கு ஆகாரம் கொண்டுவந்து கொடுத்து விட்டுப் போனாள்;
என் சாப்பாட்டைப் பற்றி அவர் சமையற்காரியைக் கேட்டதற்கு, அவள்
தனக்குத் தெரியாது எனக் கூறி விட்டாள். அவர் தன் ஆகாரத்தை அருந்த
மறுத்தார். நான் பிறகு சாப்பிடுகிறேன் என்றதும் அவர் அருந்தினார்.
உடனே என்னைச் சாப்பிட்டு வரும்படி கூறினார். எனக்கு மனமேயில்லை.
பசியும் தெரியவில்லை. சிறிது நேரம் ஊருக்குள் சுற்றிவிட்டு வீடு திரும்பி
னேன். நான் வாயிலை அடையும் சமயம் மாப்பிள்ளை காரில் வந்தார்.
சேவகன் என்னை உள்ளே அனுமதிக்க மறுத்து சீட்டு கேட்டான். எனக்கு
அப்பொழுதே உடல் குன்றியதுபோல் தோன்றியது. வேறு வழியில்லாமை
யால் அவனிடம் எழுதி அனுப்பினேன். அதை அவரிடம் காண்பித்து,
அவர் உத்திரவின்மேல் கமலாவிடம் சென்றிருக்கிறது. சேவகன் என்
தகப்பனாரிருக்கும் அறைக்குப் போகச்சொன்னான். நான் உட்புகுந்ததும்
கமலாவின் மகன் பாலன் என்னைக் கண்டு ஓடி வந்தான். அவனைத் தூக்
கிக்கொண்டு என் தகப்பனாரிருந்த அறைக்குச் சென்று சில பழங்களைக்
கொடுத்தேன். அவன் அது வேண்டும் இது வேண்டும் என்றான். அதன்
மேல் நான் உனக்கு 50 ரூபாய் அனுப்பும்படி தந்தி எழுதி, நீ அனுப்பியதில்
வாங்கிக் கொடுத்தேன். நான் சென்ற அன்று மாலை நான்கு மணிக்கு
கமலா கூப்பிடுவதாக வேலைக்காரி வந்து சொன்னாள். நான் போயிருந்
தேன். "இது உன் ஆபிஸின் வீடல்ல. தாராளமாய் நீ வீட்டில் நடமாட
லாம். அந்த ஒரே அறையில் தங்கியிருக்க வேண்டியதில்லை. அப்பா
என்ன சிறிதாவது தெளிந்து இருக்கிறாரா? நான் அவரைத் தினம்
இரண்டு தடவைகள் தான் பார்ப்பது. இன்னும் ஒரு மணி நேர
மிருக்கிறது அவரைப் பார்க்க. மற்றப்படி உனக்கு ஆபீஸில் தொந்திரவு
ஒன்றுமில்லையே. இருந்தால் இவரை ஒரு கடிதம் கொடுக்கச் சொல்
கிறேன். அட! மறந்து போய் விட்டேனே. மத்யானம் சாப்பிட்டாயா
இல்லையா?" என்று ஒரேயடியாக பலவற்றையும் குழப்பிக் கேட்டாள்.
எனக்கு வந்த ஆத்திரத்தை எப்படியோ அடக்கிக்கொண்டு, "நான் சாப்
பிட்டால் என்ன, இல்லாவிடில் என்ன? நான் உன்னைக் காட்டிலும் மிகுந்த
ஆனந்தத்துடன்தா னிருக்கிறேன். எனக்கு ஆபீஸிலும் சரி, வெளியிலும்
சரி மற்றொருவருடைய உதவி தேவையில்லை. ஆனால் ஒன்றுமட்டும் நான்
உன்னிடம் வேண்டுகிறேன். அது விஷயத்தில் நீ உன் கடமையை அறிந்து
நடந்தால் போதுமானது. நமது தகப்பனருக்கு அதிக வயதாகிவிட்டது.
அதிகமிருந்தால் ஒன்று அல்லது இரண்டு வருடங்களே உயிருடன் இருக்
கப் போகிறார். அவரைக் காப்பாற்றும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது
தான் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். உதவிக்கு ஆள் இல்லாத
தால் தான் உன்னிடம் அவர் இருக்கிறார். அவரை அடிக்கடி போய்ப்
பார்த்து சமீபத்திலிருந்து வேண்டிய பணிவிடைகளைச் செய்து, அவருடைய
ஆசிகளைப் பெற்றுக் கொள். அவரை தினம் இரண்டு தடவைகள்தான்
பார்ப்பது என நீ சொல்லியது எனக்கே மிகுந்த துன்ப மளிக்கிறது: அவ
ருக்கு எப்படி யிருக்குமோ தெரியவில்லை. உனக்குத் தெரியாத எதையும்
நான் கூற வரவில்லை" என்று நயமாகக் கூறினேன். இதற்குள் அவள்
இடை மறித்து, "நீ சொல்வது சரிதான். எனக்கு இரண்டு தடவைகள் அவ
ரைப் பார்ப்பதற்கே நேர மிருப்பதில்லை. அதனால் வேலைக்காரர்களுக்குச்
சொல்லி வைத்திருக்கிறேன். ஒரு குறைவு மில்லாமல் அவர்கள் பார்த்துக்
கொள்வார்கள். நீ இப்பொழுது சொல்லியதையே உன் கடிதங்களிலும்
எழுதி வருகிறாய். இதிலிருந்து நீ நம்பிக்கை கொள்ளவில்லை எனத் தெரி
கிறது. கஷ்டப்பட்டும் கெட்ட பெயர் எனக்கு வேண்டாம். உனக்கு எப்

பொழுது உனக்கு அவள் கிடைக்கிறதோ அப்பொழுதே நீ அவரை அழைத்துப் போவதில் எனக்கு ஆட்சேபமில்லை. அவளும் எப்பொழுதாவது அப்பாவைப் பார்க்காமலிருப்பதில்லை" என்றாள் கமலா.

எனக்கு அவளுடைய அந்த வார்த்தைகள் கோபத்தை உண்டாக்கிவிட்டது. ஆச்சரியமும் வெட்கமும் பசியும் வேறு. என் கோபத்தை அடக்கப் பார்த்தும் முடியவில்லை. "சரி, பின். இப்பொழுது நீ இருக்கக்கூடிய அந்தஸ்து யாரால் ஏற்பட்டது என்பதை நீயும், உன் கணவனும் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அப்பாவுடைய சொந்த சம்பாத்தியமான பதினையாயிரத்தையும் உங்களுக்கு இந்த அந்தஸ்து வர செலவு செய்தார். அவர் இது போன்று செய்யாமலிருந்து வேறு ஒருவனுக்கு நீ வாழ்க்கைப்பட்டிருந்தால், அவனும் என் போன்று ஓர் குமாஸ்தாவாகத்தா னிருப்பான் என்பதைச் சிந்தித்துப் பார். அல்லது அப்பா பணத்தை எனக்கு செலவு செய்திருந்தால் நானும் இந்த அந்தஸ்தி லிருப்பேன். இதையெல்லாம் இப்போது பேசிப் பயனில்லை. அவரும் இவ்வசமாக உன் உதவியை எதிர்பார்த்துச்சாப்பிடவில்லை. எனக்கு வரக்கூடிய அற்பப் பென்ஷனிலேயே ஒரு சமையற்காரியை வைத்து அவர் சாப்பிட முடியும். பெண் என்ற வாஞ்சையாலும், வேறு கிட்ட உறவினர் யாருமில்லாததாலும் உன் வீட்டில் வந்திருக்கிறார். நான் அவரை அழைத்துப் போவதில் உனக்கு ஆட்சேபமில்லை என்றாய். இன்னும் ஒரு மாதத்திற்குள் நான் அவரை நீ தடுத்தாலும், அல்லது கெஞ்சிக்கேட்டுக் கொண்டாலும் இங்கிருந்து அழைத்துப்போய் விடுகிறேன்" என்றேன். அச்சமயம் சேவகன் வந்து, "உங்களிருவரையும் ஐயா அழைத்து வரச் சொன்னார்கள்" என்றான். பசி மில்லாவிடினும் மாப்பிள்ளையைக் கண்டுவர வேண்டியதே என நினைத்து, கமலாவின் பின்பே சென்றேன். ஏனெனில் எனக்கு அந்த வீடு பூராவும் தெரியாது.

"வாசு! உட்காரப்பா. ஏது இவ்வளவு காலம் சென்று எங்களைப் பார்க்க வந்துவிட்டாய். சௌக்யமாக இருக்கிறாயல்லவா? நீ மதுராபுரியில் தானே இருக்கிறாய்?" என்றார். நான் எல்லாவற்றிற்கும் தலையை அசைத்து விட்டுப் பேசாதிருந்தேன். மறுபடியும், "உங்கள் ஆபீஸரா யிருப்பவன் என் கூடப் படித்தவன். உன்னைப்பற்றி அவனுக்குத் தெரிவித்து முடிந்ததைச் செய்யச் சொல்லலாமென நினைப்பதுண்டு. ஆனால் அதுபோன்று செய்வதற்கு நேரம்தானில்லை. நீ ஊருக்குப் போகும்பொழுது கவனமாகக் கேள். ஒரு கடிதம் கொடுக்கிறேன். அல்லது எங்கேயாவது மாற்றுதல் வேண்டி யிருந்தாலும் நான் உனக்கு வேண்டியதைச் செய்யத் தயாரா யிருக்கிறேன். தவிர, உன் தகப்பனார் எப்படி யிருக்கிறார்? சிறிதாவது குணம் கண்டிருக்கிறதா?" என்று சொல்லிச் சிறிது நிறுத்தினார். உடனே நான், "தங்களுடைய பரிவுக்கு மிகவும் வந்தனம். நிச்சயம் உங்கள் உதவியை என் தகப்பனார் விஷயத்தில் தான் கோருகிறேன். அவரைக் கொஞ்சம் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். என்னைப்பற்றிய கவலை உங்களில் யாருக்கும் வேண்டாம். ஆண்டவன் கொடுத்துள்ள சிற்றறிவும், அதிர்ஷ்டமும் என் பங்கில் பூரணமாக இருக்கிறது" என்றேன்.

(தொடரும்).

## சித்திரபானு ௵ பங்குனி ௴ நவக்கிரக*நிராயன சுத்தஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியார மணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | வி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 11 | 22 | 55 | 329 | 47 | 61 | 08 | 276 | 02 | 313 | 01 | 80 | 10 | 353 | 04 | 43 | 46 | 120 | 08 |
| 2 | 11 | 26 | 51 | 330 | 47 | 73 | 16 | 276 | 45 | 314 | 45 | 80 | 11 | 354 | 15 | 43 | 49 | 120 | 04 |
| 3 | 11 | 30 | 48 | 331 | 47 | 84 | 24 | 277 | 28 | 316 | 29 | 80 | 12 | 355 | 26 | 43 | 53 | 120 | 01 |
| 4 | 11 | 34 | 44 | 332 | 46 | 97 | 25 | 278 | 12 | 318 | 13 | 80 | 14 | 356 | 37 | 43 | 57 | 119 | 58 |
| 5 | 11 | 38 | 41 | 333 | 46 | 109 | 27 | 278 | 56 | 319 | 57 | 80 | 16 | 357 | 43 | 43 | 01 | 119 | 55 |
| 6 | 11 | 42 | 37 | 334 | 46 | 121 | 46 | 279 | 40 | 321 | 43 | 80 | 18 | 359 | 00 | 44 | 04 | 119 | 51 |
| 7 | 11 | 46 | 34 | 335 | 46 | 134 | 04 | 280 | 23 | 323 | 29 | 80 | 20 | 0 | 12 | 44 | 08 | 119 | 48 |
| 8 | 11 | 50 | 30 | 336 | 45 | 146 | 36 | 281 | 06 | 325 | 17 | 80 | 22 | 1 | 24 | 44 | 13 | 119 | 45 |
| 9 | 11 | 54 | 27 | 337 | 45 | 159 | 07 | 281 | 48 | 327 | 04 | 80 | 24 | 2 | 36 | 44 | 18 | 119 | 42 |
| 10 | 11 | 58 | 23 | 338 | 44 | 171 | 57 | 282 | 32 | 328 | 49 | 80 | 27 | 3 | 49 | 44 | 23 | 119 | 38 |
| 11 | 12 | 02 | 21 | 339 | 44 | 184 | 46 | 283 | 15 | 330 | 33 | 80 | 29 | 5 | 01 | 44 | 28 | 119 | 35 |
| 12 | 12 | 06 | 17 | 340 | 43 | 198 | 32 | 283 | 53 | 332 | 24 | 80 | 31 | 6 | 14 | 44 | 33 | 119 | 32 |
| 13 | 12 | 10 | 14 | 341 | 43 | 212 | 17 | 284 | 41 | 334 | 15 | 80 | 34 | 7 | 26 | 44 | 37 | 119 | 29 |
| 14 | 12 | 14 | 10 | 342 | 42 | 226 | 19 | 285 | 24 | 336 | 03 | 80 | 36 | 8 | 39 | 44 | 42 | 119 | 26 |
| 15 | 12 | 18 | 07 | 343 | 42 | 240 | 21 | 286 | 07 | 337 | 50 | 80 | 39 | 9 | 51 | 44 | 46 | 119 | 23 |
| 16 | 12 | 22 | 03 | 344 | 41 | 254 | 33 | 286 | 50 | 339 | 39 | 80 | 42 | 11 | 03 | 44 | 51 | 119 | 20 |
| 17 | 12 | 26 | 00 | 345 | 40 | 268 | 45 | 287 | 33 | 341 | 27 | 80 | 45 | 12 | 15 | 44 | 56 | 119 | 17 |
| 18 | 12 | 29 | 56 | 346 | 39 | 283 | 01 | 288 | 19 | 343 | 15 | 80 | 48 | 13 | 26 | 45 | 01 | 119 | 13 |
| 19 | 12 | 33 | 53 | 347 | 39 | 297 | 23 | 289 | 04 | 345 | 03 | 80 | 52 | 14 | 38 | 45 | 06 | 119 | 10 |
| 20 | 12 | 37 | 49 | 348 | 38 | 311 | 29 | 289 | 50 | 346 | 50 | 80 | 55 | 15 | 50 | 45 | 11 | 119 | 07 |
| 21 | 12 | 41 | 46 | 349 | 38 | 325 | 34 | 290 | 35 | 348 | 40 | 80 | 59 | 17 | 01 | 45 | 15 | 119 | 04 |
| 22 | 12 | 45 | 42 | 350 | 37 | 339 | 22 | 291 | 21 | 350 | 29 | 81 | 02 | 18 | 13 | 45 | 20 | 119 | 00 |
| 23 | 12 | 49 | 39 | 351 | 36 | 353 | 10 | 292 | 05 | 352 | 17 | 81 | 06 | 19 | 24 | 45 | 24 | 118 | 57 |
| 24 | 12 | 53 | 35 | 352 | 35 | 6 | 25 | 292 | 52 | 354 | 05 | 81 | 09 | 20 | 37 | 45 | 29 | 118 | 54 |
| 25 | 12 | 57 | 32 | 353 | 34 | 19 | 40 | 293 | 37 | 355 | 53 | 81 | 13 | 21 | 49 | 45 | 33 | 118 | 51 |
| 26 | 13 | 01 | 28 | 354 | 33 | 32 | 09 | 294 | 23 | 357 | 52 | 81 | 18 | 23 | 02 | 45 | 39 | 118 | 47 |
| 27 | 13 | 05 | 25 | 355 | 30 | 45 | 09 | 295 | 09 | 359 | 50 | 81 | 23 | 24 | 15 | 45 | 45 | 118 | 44 |
| 28 | 13 | 09 | 21 | 356 | 31 | 58 | 09 | 295 | 53 | 1 | 59 | 81 | 29 | 25 | 29 | 45 | 52 | 118 | 41 |
| 29 | 13 | 13 | 18 | 357 | 30 | 71 | 09 | 296 | 37 | 4 | 07 | 81 | 36 | 26 | 43 | 45 | 59 | 118 | 38 |
| 30 | 13 | 17 | 15 | 358 | 29 | 82 | 36 | 297 | 12 | 6 | 20 | 81 | 42 | 27 | 58 | 46 | 07 | 118 | 34 |
| 31 | 13 | 21 | 12 | 359 | 29 | 94 | 03 | 293 | 07 | 8 | 32 | 81 | 48 | 29 | 12 | 46 | 14 | 118 | 31 |

### ஆகாயக் காட்சி.

இம்மாதத்தில் காட்சிக்குரிய பொழுதில் வானத்தே எதுவும் சேருவதில்லை.

*அயனாம்சம் பா-22 கலை-55 விகலை 55 கூட்ட சாயன ஸ்புடம் வரும். †ராகு ஸ்புடத்துடன் ராசி ஆறு அல்லது பாகை 180 கூட்ட கேதுஸ்புடம் வரும்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

சித்திரபானு௵ பங்குனி௴—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865
பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜிரா 1362
இங்கிலீஷ் 1943௵ மார்ச்சு௴—1943௵ ஏப்ரல்௴

| பங்குனி௴ | மார்ச்சு௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | ஞா | அ22-48 | கிரு 26-25 | சித்60 | மீனரவி நா-22-52 |
| 2 | 15 | திங் | சவ27-37 | திரு 32-23 | சி32-23 அ | தானியம் செலவிட |
| 3 | 16 | செவ் | தச33-1 | புன39-1 | சித்60 | மாடுவாங்க, எருவிட |
| 4 | 17 | புத | ஏகா38-25 | பூச45-35 | சித்60 | அமலக ஏகாதசி |
| 5 | 18 | வியா | து43-11 | ஆயி51-37 | சி51-37 அ | கவிஷ்ணுசாந்தி செய்ய |
| 6 | 19 | வெள் | திர47-25 | மக56-26 | ம56-26சி | கரிநாள், பிரதோஷம் |
| 7 | 20 | சனி | சது50-24 | பூர60-0 | சித்60 | காம தஹனம் [திரம் |
| 8 | 21 | ஞா | ○52-13 | பூர0-36 | சி0-36அ | பௌர்ணமி, பங்குனி உத் |
| 9 | 22 | திங் | பிர52-49 | உத்3-35 | சித்60 | பால்குன பகுளம், வசந் தோற்சவம் |
| 10 | 23 | செவ் | துதி51-35 | அஸ்6-1 | சித்60 | சதுர்மாச துவிதியா |
| 11 | 24 | புத | திரு49-49 | சித்6-35 | சித்60 | |
| 12 | 25 | வியா | சது46-47 | சுவா6 0 | அ6-0சி | |
| 13 | 26 | வெள் | பஞ்43-11 | விசா4-13 | சித்60 | |
| 14 | 27 | சனி | சஷ்38-2 | அனு1-48 கே58-12 | சித்60 | |
| 15 | 28 | ஞா | சப்33-1 | மூல54-35 | அ54-35சி | |
| 16 | 29 | திங் | அஷ்27-0 | பூரா51-0 | மர60 | |
| 17 | 30 | செவ் | நவ21-1 | உத்46-47 | சி46-47சி | |
| 18 | 31 | புதன் | தச15-0 | திரு 42-36 | சி42-36 பி | |
| 19 | 1 | வியா | ஏகா8-54 | அவி39-1 | சி39-1ம | கரிநாள் |
| 20 | 2 | வெள் | துவா3-0 திர58-48 | சத36-0 | சித்60 | அவமாகம், பிரதோஷம், மாவகை நட, குளிக்க |
| 21 | 3 | சனி | சது54-35 | பூர33-2 | ம33-2சி | மாச சிவராத்திரி |
| 22 | 4 | ஞா | அ●51-37 | உட்31-11 | அமி60 | சர்வத்திர அமாவாசை |
| 23 | 5 | திங் | பிர49-13 | ரே30-1 | சித்60 | யுகாதி பண்டிகை |
| 24 | 6 | செ | துதி48-37 | அசு30-36 | சித்60 | வேதவியாஸ தீர்த்தம் |
| 25 | 7 | புத | திரு48-36 | பர32-25 | சி 32-25அ | மத்ஸய ஜயந்தி |
| 26 | 8 | வியா | சது50-25 | கி❋35 23 | பர60 | கிருத்திகை விரதம் |
| 27 | 9 | வெ | பஞ்52-49 | ரோ-39-1 | ம36-1சி | லக்ஷ்மீ ஜயந்தி, சஷ்டி விர |
| 28 | 10 | சனி | சஷ்56-23 | மிரு 44 25 | சித்80 | திருதினஸ் பிருக் |
| 29 | 11 | ஞா | சப்60-0 | திரு 50-23 | சித்60 | |
| 30 | 12 | திங் | சப்1-48 | புனர்57-0 | அ57-0சி | அசோகாஷ்டமி [நவமி |
| 31 | 13 | செ | அஷ்7-12 | பூச60-0 | சித்60 | திருதினஸ்பிருக், ஸ்ரீராம |
| 1 | 14 | புத | நவ12-1 | பூச3-35 | சித்60 | சுபானு௵ வராஹஜயந்தி |

(1943௵ ஏப்ரல்௴)

| சூ-சு | | சனி | குரு |
|---|---|---|---|
| புத கே | 3-கட-ராகு6-மேஷ-சு10மீ | | |
| அங் | புத-27-மே-பு 31-ரிஷப-சுக் | | ராகு |
| | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத
சிங்கபலத்தைத் தருவதேது?

முறையாய்ச் செய்த அயக்காந்த செந்தூரத்தைக்காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஔடதம் வேறொன்றுமில்லை.




**விளம்பரம்.** இதைக் கண்ணுறும் கனவான்களே! இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

இந்த லேகிய செந்தூரங்களால் நிவர்த்தியாகும் முக்கிய வியாதிகளாவன :—

தற்காலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவருக்கு உண்டான 20 வகை மேகரோகங்கள், சூலைரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த வெப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம் அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரையில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்கமுடியாத பாதையைத் தரும் தந்திமேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீங்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நரம்புகளுக்கும் முறுக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கி பலத்தைத் தருவதில் இதற்குமிஞ்சின இலேகிய பஸ்பம் வேறொன்றுமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்லுவோம். இதல்லாமல் தேகத்தைப் புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு நகக்கண் வெளுத்திருத்தல் முதலிய வியாதி

களைக் கண்டித்து தினந்தோறும் மலத்தை தாராளமாய்ப் போக்குவதில்
இந்தலேகிய செந்தூரங்களே முதன்மையானதுயென்பதை நாம் எமது அநு
பவத்தில் கண்டிருக்கிறோம். சிற்க இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட
வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர்
பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபார
குணம் தெரியவரும். தவிர யாங்கள் இம்மகத்துவம் பொருந்திய லேகிய
செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும்.
மேலும் இவற்றை நோய் உள்ளவரே தான் சாப்பிடவேண்டும் என்ற
அவசியமில்லை; யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய்
இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் இந்த லேகிய செந்தூரங்களை
யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும். இது
தவறாது. இவற்றைத் தருவித்து நண்பர் எண்ணிக்கையாகச் சாப்பிட்டு
10-நாளைக்குள் குணம் இல்லாவிடில் உடனே தெரியப்படுத்தினால் கட்டா
யம் இவற்றிற்கு வாங்கிய பணம் வாப்ஸ் செய்யப்படும். தவிர மேற்காட்
டிய நோய்கள உடையோர் 48-நாட்கள் சாப்பிடுவார்களேயானால் அவை
முழுதும் நீங்கிவிடும். அப்படி நீங்கிக் குணம் ஏற்படாவிடில் நாங்கள்
அதற்கு உத்தரவாதிகளாவோம். யாங்கள் இவ்வளவு அருமையான லேகிய
செந்தூரங்களை எவ்வளவோ சிரத்தையுடன் கஷ்டப்பட்டு முடித்துப்
பரோபகாரார்த்தமாக வெளியிட்டோம். இவ்வருமை வாய்ந்த லேகிய செந்
தூரங்களுக்குப் பொன்மெடல், வெள்ளிமெடல், பெற்றதல்லாமல் ஆயிரக்
கணக்கான யோக்கியதாம்ச பத்திரங்களும் பெற்றிருக்கின்றோம். ஆதலின்
எமது லேகிய செந்தூரங்கள் நாம் சொன்னபடி குணத்தைக் கொடுக்கும்
என்பதைப்பற்றி ஜவாப்தாரியாக யிருக்கக் காத்துக் கொண்டிருக்கிறோம்;
இது உண்மை. இவற்றை ஒரேதரம் தருவித்துப் பாருங்கள்; எமது
உண்மை விளங்கும்.

வாதாதிக்க தோஷத்தினாலாவது, துராப்பியாசத்தினாலாவது, அதிக
மனக்கவலையினாலாவது, அடிக்கடி உண்டாகும் நோயினாலாவது, மற்றெந்த
காரணத்தினாலாவது பலமிழந்தவர்கள் எண்ணிக்கையாக டி லேகிய செந்
தூரங்களைப் புசிப்பார்களானால் இவை தேகாரோக்கியம், வலிமை, அழகு
முதலியவற்றை அவர்க்குக் கொடுத்து அவர்களைச் சந்தோஷிக்கச் செய்யு
மென்பதில் தடையில்லை. வெளியூர்க் கனவான்கள் இந்த லேகிய செந்
தூரங்களில் முழு நம்பிக்கை வைத்து ஒரே ஒருதரம் இவற்றைப் பரீக்ஷிப்
பார்களானால், அவர்கள் அவசியம் ஆனந்தமடைவார்கள்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப்
பலகாரங்களையும் நீக்குதலின்றி சாப்பிடலாம். மருந்து சாப்பிடும்போது
பசி அதிகமாய் எடுக்கும் ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு, கறி, மார்க்
கண்ட ரூப்பு, இவைகளை அதிகமாகப் பசியைத் தணிக்கக்கூடிய விதமாகத்
தாமதம் செய்யாமல் சாப்பிடல் வேண்டியது. இவற்றைப் புசிக்கும்
போதெல்லாம் பலகாராதிகள சாப்பிடல் வேண்டும். தயிர், பால் முதலிய
வைகள் எவைகளாயிருந்தாலும் சந்தேகமின்றி சாப்பிட்டு வரலாம்.

இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களை மட்டும் ஒருவர் தருவித்து
எண்ணிக்கையாக 48-நாள் சாப்பிடுவாரே யானால் இவை தேகத்தில் ஊற
ஊற, மேகமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி அவர் தேகமானது
கொழுத்துப் புதிய ரத்தம் பாவி தன் வாழ்நாள் பரியந்தம் இளைக்காமலிருக்
கும். இவற்றைப் புருஷன் பெண்சாதி இருவரும் ஏககாலத்தில் ஒற்றுமை
யாய்ச் சாப்பிட்டு வந்தார்களேயானால், அவர்க்கு உதிக்கும் மக்கள் வீரத்

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினால் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினால் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த் தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினால் நரைத்த மயிர் கருத்துவிடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது. சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை, கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினால் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது தேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.



# கூந்தல் வளரும் துளி



இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது; சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும். புட்டி 1-க்கு அணா 12. தபாற்கூலி வேறு.

# ருதக நிவாரணி மாத்திரை



ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) கிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலேயிருத்தல், வயிற்றுவலி, ஜுரம், மார்பு நோய், மயக்கம், கழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும், ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# ஜீவாதார சஞ்சீவி திராவகம்

இது தங்கம், அயம், மற்றும் சில சத்துப் பொருள்களைச் சேர்த்து அனுபோக முறையில் தயார் செய்யப்பட்டதாகும். சரீரத்திலுள்ள நரகாடிகளும் தளர்ந்து பலங் குறைந்து அகால மரணத்துக் குள்ளாகும் கொடிய விபத்துக்கு இத்திராவகம் கைகண்ட சஞ்சீவியைப் போன்றது. இது சரீரத்திற்கு சுகத்தைக் கொடுத்து, ஆயுளை விருத்திசெய்து, பலவீனம், கைகால் ஓய்ச்சல், சோம்பல், தேகம் மெலிதல், ஜீரணக் குறைவு, புளியேப்பம், பசியின்மை, ஞாபகக் குறைவு, தைரியமின்மை, தாது நஷ்டம், கண்டமாலை, மலச்சிக்கல், நரம்புத் தளர்ச்சி, மார் நோய், சரீரம் வெளுத்தல் முதலிய வியாதிகளை ஒரு வாரத்திற்குள் மாந்திரீகம்போல் குணப்படுத்தும். இது வரையில் எந்த வைத்தியர்களாலும் கண்டுபிடிக்கப்படாத அவுஷதம் இதுவே என்பதை இதை உட்கொண்ட ஐந்து நிமிஷத்தில் தெரிந்து கொள்ளலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரையிலும் உபயோகிக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூ. 1. புட்டி 3-க்கு விலை ரூ. 2—8—0.



# மோஹினி பரிமள கூந்தல் தைலம்




இந்தத் தைலத்தை கூந்தலில் தடவிக் கொண்டால் அன்று மலர்ந்த புஷ்பங்களின் வாசனைக்கு நிகராயிருக்கும். கூந்தலுக்கு வளர்ச்சியைத் தருவதுடன் தலைக் கொதிப்பையும் அடக்கி தேகத்திற்கு ஆரோக்கியத்தைத் தரவல்லது. இதன் விலை அணா 12.

# சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 4-வரையில் தேகதிடமறிந்து சாப்பிட்டால் சுகமாய்ப் பேதியாகிவிடும். இம் மாத்திரையை சிறு குழந்தைகளுக்கு 1-மாத்திரை முதல் தேக திடமறிந்து முலைப்பாலில் உபயோகிக்கலாம். வாய்க்கசப்பு, கொமட்டல், நெஞ்சு கரகரப்பு, வாந்தி, வயிற்றுவலி முதலிய எவ்வித கெட்ட குணம் கிடையாது. உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

24-மாத்திரை புட்டி 1-க்கு விலை அணா 4.

---

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினாலாவது வேறு அந்தக் காரணத்தினாலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனால் உண்டாகக்கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினாலாவது, புழு வெட்டினாலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்; இதனால் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கைகால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும், தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தைத் தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேகதிடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும்பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1—12—0.

## காசா

காசம், இருமல், க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு தலை சிறந்த ஔடதமாகும். (இம் மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி) மலையாளத்தில் அநேகவிதமான வனமூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டு முறைப்படி தயார் செய்தது. பத்தியமின்றி சாப்பிடலாம்.

30 நாள் 60 வேளை மருந்து விலை ரூபா 2—8—0.

## எலிக்ஸ்ரைன்

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும்.

20 நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக்கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூபா 2—4—0.

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்.

**ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை.**

| பெயர் | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன்2பாகம் | 3 | 4 |
| மதனும்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| ஆரூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

574

---

| பெயர் | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| அகடவிகட விலாச விநோதம் | 0 | 10 |
| மோட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| பெயர் | ரூ. | அ. |
|---|---|---|
| தயாராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனக[illegible]னி ... | 0 | 8 |
| கண்டிரா[illegible]கம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயண வசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| மூப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 8 |
| பரசுராமன் ... | 0 | 8 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனுமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி கே. 167, மதராஸ்.**

